# THE MADRAS JUNIOR

(OFFICIAL QUARTERLY JOURNAL OF THE JUNIOR RED CROSS)

அக்டோபர் 1955





Annual General Meeting of the Madras State Branch held at the Red Cross Buildings, Madras, on 27th June 1955 under the Presidentship of Padmabushan Dr. A. Lakshmanaswamy Mudaliar. Picture shows the Honorary Secretary (Sri C. AMRITAGANESAN) reading the Annual Report. (Report appears in this issue on page 2)

President of the Madras State Branch (Padmabushan Dr. A. Lakshmanaswamy Mudaliar) addressing the Annual General Meeting.

## ST. MARY'S HIGHER ELEMENTARY SCHOOL

### COONOOR





Pictures showing the Members of the J.R.C. Group of the above school working at their School Garden. Our Honorary Director is also seen in the picture (left) looking at the work of the Juniors.



## பத்திராதிபர் குறிப்பு

அன்பார்ந்த ஜூனியர்களே,

நமது ராஜ்யப் பிராஞ்சு 1955-ஆம் வருஷத்திய ஜூனியர் ரெட்கிராஸ் ராஜ்யப் போட்டிகளை எப்பொழுதும்போலவே நடத்திற்று. போட்டிகளுக்குரிய விதிகள் இந்த சஞ்சிகையில் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. ராஜ்யத்திலுள்ள சுமார் 2,500 சங்கத் தொகுதிகளில் 5 சங்கத் தொகுதிகள் மாத்திரந்தான் சென்ற வருஷத்தில் போட்டிகளுக்கான நமூனுக்களை அனுப்பின. ஆனுல், கவுன்சிலர்களிடமிருந்தும், சங்கத் தொகுதிகளிடமிருந்தும் வரப்பெற்ற இப்போட்டி சம்பந்தமான பதில்கள் நமது கமிட்டிக்கு மிகவும் ஏமாற்றத்தையே அளித்தது. இருந்தபோதிலும் இவ்வருஷம் ஜில்லாக்களிலுள்ள ஜூனியர் ரெட் கிராஸ் சேவைகள் மேன்மேலும் விருத்தியடைந்துள்ளன இவற்றிற்கு நமது ஜில்லாக் கமிட்டிகள் எடுத்துக்கொண்ட ஊக்கமே காரணமாகும். எனவே, இவைகளிலிருந்து வியக்கத்தகுந்த அளவில் அதிக எண்ணிக்கையுள்ள நமூனுக்கள் வரும் என்று கமிட்டி நினைக்கிறது. ஆகையினுல், குறித்த தேதிக்கு முன்னமேயே தங்கள் நமூனுக்களை அனுப்புவதற்கு இப்பொழுதிலிருந்தே நமூனுக்களைத் தயாரிக்க வேண்டுமென்று நமது எல்லாக் கவுன்சிலர்களையும், சங்கத் தொகுதிகளையும் நாம் கேட்டுக்கொள்ளுகிறோம். போட்டிகளுக்காக எத்தனை நமூனுக்கள் வரப் போகின்றன என்பதையும், அவ்வாறு அனுப்புபவர்களாகிய உங்களில் யார் பரிசு பெறப் போகிறீர்கள் என்பதையும் பார்ப்போம்.

இந்தியா முழுவதிலுமுள்ள அங்கத்தினர்கள் அனைவருக்கும் நவம்பர் மாதமானது நிதிதிரட்டுதலும், அங்கத்தினர்களாதலுமான இயக்க மாதம் (Fund Raising and Membership Campaign Month) என்று தெரியும். ஒவ்வொரு வருஷமும் அத்தகைய இயக்கத்தை நடத்துதற்குரிய காரணம் பின் வருமாறு:— (1) ரெட்கிராஸ் தன்னுடைய ஜீவகாருண்ணிய சேவைகளைச் செய்வதற்கு நிதி ஏற்படுத்துதல் (2) மதம், குலம், ஆண் பெண் முதலியவைகளில் சிறிதும் வேறுபாடில்லாமல் நமது நாட்டில் ஒவ்வொரு கிராமத்திலுமுள்ள மூலைமுடுக்குகளில் வசிக்கும் மக்களிடையே நம்முடைய சர்வதேச ஒழுங்கையும், காருணியத்தின் பொருட்டுச் செய்யும் அதன் சேவைகளையும் பரவச் செய்தல் இதன் பிரகாரம், இவ்வருஷம் நவம்பர் மாத வருடாந்தர இயக்கத்தை நடத்தும்பொழுது, முன்போலவே ஒத்துழைத்துத் தங்களாலான ஆத்ம சேவைகளைச் செய்ய வேண்டும் என்று, இதுவரையிலும் உதவிபுரிந்த ஜூனியர் ரெட்கிராஸ் தொகுதிகளைக் கேட்டுக்கொள்ளுகிறோம் நம்முடைய இயக்கத்தை நடத்த வேண்டிய ஒழுங்கு முறைகளை நமது ஜில்லாப் பிராஞ்சுகளுக்கும், ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டிகளுக்கும் அவ்வப்பொழுது தெரிவித்துக்கொண்டிருப்போம். சங்கத் தொகுதிகள் முந்தின வருஷத்தைப்போல நிதி திரட்டலுக்காகச் சில ஒழுங்கு முறைகளை வகுத்து நடத்த விரும்பினுல், அவைகளுக்கு அவ்வப்பொழுது எமது அறிவிப்புகள் மிகவும் உதவியாக இருக்கும். நவம்பர் மாதத்தில் வழக்கம் போலவே ரெட்கிராஸ் கொடிகள் (Red Cross Flags) விற்பனைக்குக் கிடைக்குமாறு செய்யப்படும், ஆகையினுல், மேலும் பல விஷயங்களை அறிந்துகொள்வதற்கு மிகவும் அருகிலுள்ள ஜில்லா ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டிகளுடனுவது அல்லது ரெட்கிராஸ் பிராஞ்சுகளுடனுவது சங்கத் தொகுதிகள் தொடர்பு வைத்துக் கொண்டால், அவைகளுக்கு நாங்கள் மிகவும் நன்றியுள்ளவர்களாக இருப்போம்.

இப்படிக்கு,

உங்கள் சேவையில் இருக்கும்,

**T. P. சந்தானகிருஷ்ண நாயுடு.**

# சென்னை ராஜ்யப் பிராஞ்சின் வருடாந்திரப் பொதுக்கூட்டம்

இந்த வருஷம் ஏப்பிரல் மாதம் நடக்க வேண்டிய சென்னை ராஜ்யப் பிராஞ்சின் வருடாந்திரப் பொதுக் கூட்டம் ஜூன் மாதத்தில் நடந்தேறியது. அப்பொழுது கூட்டத்திற்கு விஜயம் செய்தவர்கள், அங்கத்தினர்கள் ஆகியோர்களின் அபிமானத்தையும் மிகுந்த பிரீதியையும் அப்பொதுக் கூட்டம் மெய்ப்பித்துக் காட்டியது.

இந்த வருஷத்துக் கூட்டத்தின் கவனிக்கத்தகுந்த முக்கிய அமிசம் பின் வருபவை :— சங்கத்தின் நோக்கங்கள், கருத்துக்கள் ஆகியவைகளை விளக்கி ரெட்கிராஸும், ஜூனியர் ரெட்கிராஸும் போஸ்டர்களையும், படம் எழுதிய சிறு புத்தகங்களையும் கண்காட்சிக்காக வைத்தல்; நகரப் பள்ளிக்கூடங்களில் உள்ள ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதிகள் தயாரித்த மாதிரிப் பொம்மைகள், படங்கள் முதலியவைகள்; மருத்துவ சாலைகளில் பல நாட்கள் இருந்துவரும் பிணியாளர்களால் தயாரிக்கப்பட்ட விநோத மருத்துவப் பொருள்கள்; பிணியாளர்களுக்காக மருத்துவ சாலைகளுக்குத் தேவையான பொருள்கள் "மருத்துவ விநியோகக் கடன் திட்டத்தின்" (Medical Supply Loan Scheme) கீழ்க் கொடுக்கப்படுதல்; முழங்கையில் பாண்டேஜ் துணியினால் கட்டு போட்டும், மண்டை ஓட்டு எலும்பு முறிவுகளுக்குப் மரப் பலகைகள் கொடுத்துப் பாண்டேஜ் துணியினால் கட்டுப் போட்டதுமான மாதிரி மனித உருவ பொம்மையானது செயின்டு ஜான் ஆம்புலன்ஸ் சங்கத்தினால் தயாரிக்கப்பட்டது. இவைகள் அனைத்தும் ராஜ்யப்பிராஞ்சின் சேவைகளைப் பற்றிய பொதுக் கல்வியை விஜயம் செய்தவர்களுக்கும், அங்கத்தினர்களுக்கும் எடுத்துக்காட்டின. மேலே சொல்லிய பொருள்கள் எல்லாம் அழகாக அலங்கரிக்கப்பட்ட கூடாரங்களில் காட்சிப் பொருள்களாக வைக்கப்பட்டுள்ளன. இக் கூடாரங்கள் இதற்காகவே செங்கற்பட்டுக் கலெக்டர் அவர்களால் விடப்பட்டன. இந்த வருஷமும் எப்பொழுதும் போலவே விநோத மருத்துவப் பொருள்களின் விற்பனைகூட நடத்தப்பட்டது. இஃதன்றியும், மேலும் புத்தம் புதிய பூக்களும், இனிப்புப் பண்டங்கள் உள்ள பாக்கெட்டுகளும் விற்பனை செய்யப்பட்டன. ரெட்கிராஸ் நிதிக்காக நமது சங்கத்தின் நன்மையையே நாடி நிற்கும் அன்பர்களினால் இவைகள் நன்கொடையாக அளிக்கப்பட்டன. நாங்கள் லக்கி டிப்பை (Lucky Dips) விற்று, ரொக்கமாகப் பணத்தையும் பெற்றோம். பொதுவாகக் காட்சி அனைத்தும் பிரபலமாகவும், கல்விப் பயிற்சியாகவும் இருந்தது. மேலும் அக்காட்சியில் விற்பனையும் ஆதரவாக இருந்தது.

அங்கத்தினர்கள், கூட்டத்திற்கு விஜயம் செய்தவர்கள் ஆகியவர்களின் நன்மைக்காக அன்னபூர்ணா கேப்பிடேரியா (Annapoorna Cafeteria) சிற்றுண்டிசாலை அமைத்து நடத்த ஏற்பாடு செய்தது பொதுக்கூட்டத்தின் மற்றொரு முக்கிய அமிசமாகும். ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதிகளின் அங்கத்தினர்களும், சாரணச் சிறுவர்களும், வழிகாட்டிச் சிறுமிகளும் (Girl Guides) தலைவர் பத்மபூஷணம் டாக்டர் (சர்) A. லட்சுமணசுவாமி முதலியார் அவர்கள் கூட்டத்திற்கு வரும்பொழுது அவருக்கு மெய்க்காப்பு மரியாதை (Guard of Honour) அளித்தார்கள். அவர் கூட்டத்திற்குத் தலைமை தாங்கி, அதை ஆரம்பிப்பதற்கு முன் கண்காட்சிப் பொருள்களைப் பார்வையிட்டார். டயரெக்டர் ஆப் மெடிகல் சர்வீஸஸ் திரு. லெப்டினென்டு கர்னல் சங்கம் லால் அவர்கள் தலைவரையும், இதர பிரமுகர்களையும் வரவேற்றார். கௌரவக் காரியதரிசியாரால் தயாரிக்கப்பட்ட அறிக்கையும், கௌரவப் பொக்கிஷதாரரால் தயாரிக்கப்பட்ட பணயிருப்பு விவரமும் அங்கீகரிக்கப்பட்டன. பல்வேறு கமிட்டிகளுக்காக ஆபீஸ் நிர்வாகஸ்தர்களையும் அங்கத்தினர்களையும் தேர்ந்தெடுத்து நியமித்த பிறகு, அனைவரும் ஊக்கங்கொள்ளுமாறு தலைவர் சொற்பொழிவு நிகழ்த்தினார். முன் வருஷத்தில் இருந்த நிர்வாகஸ்தர்களே 1955-ஆம் வருஷத்திலும் பதவி வகித்துள்ளார்கள். ஆனால் அவர்களில் ஒருவரும், உப தலைவருமான திரு. T. M. நாராயணசாமிப் பிள்ளை அவர்கள், அண்ணாமலை சர்வ கலாசாலையில் உப அத்தியட்சகராக (Vice-Chancellor) நியமனம் பெற்றதனால், தமது பதவியை விடுத்தார். அன்னார் பதவியில் திரு. டாக்டர் யூ. கிருஷ்ணராவ் நியமிக்கப்பட்டார். இவர் பல்வேறு கமிட்டிகளில் பல வருஷங்களாக அங்கத்தினராகயிருந்தவராதலினால், ராஜ்யப் பிராஞ்சிற்கு இவர் அன்னியர் அல்லர். திரு. பிள்ளையவர்களுக்குப் பதிலாக நியமனம் செய்யப்பட்ட பெருமை பொருந்திய இவர் மனித சமுதாயத்தின் பொருட்டுச் சலியாது உழைத்த நற்சேவை, நமது ராஜ்யத்திலுள்ள அனைவருக்குத் தெரிந்திருப்பதுபற்றி நாம் அனைவரும் பெருமை கொள்ளுகிறோம். இக்கூட்டத்தில் திரு. பிள்ளையவர்கள் இல்லாமைக்கு அங்கத்தினர்கள் வருத்தம் அடைந்தார்கள். இச்சம்பவத்தில் எடுத்த புகைப் படங்கள் (Photographs) இந்தப் பிரதியில் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன.

## சென்னை ராஜ்யப் பிராஞ்சு ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டி

சப்-கமிட்டி செய்த தீர்மானங்களை நமது அங்கத்தினர்கள் அறிந்துகொள்வதற்காக நாம் கீழே பிரசுரித்திருக்கின்றோம்:—

### 1. "மதராஸ் ஜூனியர்" மேலுறைச் சித்திரப் போட்டி

மேலே சொல்லியுள்ள போட்டிக்காகக் கவுன்சிலர்களும், சங்கத் தொகுதிகளும் கொண்டிருந்த காரியப் பொறுப்பு (Response) குறைவாயிருந்ததனால், ஓவியரிடமிருந்து இரண்டு சித்திரங்கள் மாத்திரம் கமிட்டிக்குக் கிடைக்கப் பெற்றன. அவைகளில் ஒன்று கமிட்டியால் அங்கீகரிக்கப்பட்டது: அங்கீகரிக்கப்பட்ட சித்திரம் நமது அடுத்த சஞ்சிகையில் வெளியிடப்படும்.

### 2. ஜூனியர் ரெட்கிராஸ் மகாநாடு

நமது ராஜ்யத்தில் ஜூனியர் ரெட்கிராஸ் செய்யும் சேவைகளைப் பிரபலப்படுத்தவும், விரிவாக்கவும் இந்த வருஷத்திற்குள் ஜில்லாக்களுள் ஏதேனும் ஒரு ஜில்லாவில் ஜூனியர் ரெட்கிராஸ் மகாநாடு கூட்டுவதை ஆதரிப்பதாகக் கமிட்டி தீர்மானித்தது; மேலும், அம் மகாநாட்டிற்காகச் சிறிது பண உதவி செய்யவும் தீர்மானித்துள்ளது. [மகாநாடு நடத்துவதற்கு ஏற்ற ஜில்லாவைத் தெரிந்துகொள்வதன்பொருட்டு, எல்லா ஜில்லா ரெட்கிராஸ் பிராஞ்சுகளுக்கும், ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டிகளுக்கும் ஒரு சுற்றறிக்கை (Circular) விடப்பட்டது.]

### 3. "மதராஸ் ஜூனியர்" தெலுங்குப் பிரதி

ஆந்திர ராஜ்யம் பிரிக்கப்பட்டவுடன், நமது சங்கத் தொகுதிகளுக்குத் தெலுங்குப் பிரதிகள் எப்பொழுதும் தேவையில்லை. ஆகையினால், தெலுங்குப் பிரதிகளை வெளியிடுவதை நிறுத்தி, தமிழ்ப் பிரதிகளின் எண்ணிக்கையை அதிகரிக்கக் கமிட்டி தீர்மானித்துள்ளது.

---

## சென்னை ராஜ்யப் பிராஞ்சு

### 1955-ஆம் வருஷத்திய ஜூனியர் ரெட்கிராஸ் போட்டிகள்

(1) கல்லூரிகளுக்கும், உயர்தரப் பாடசாலைகளுக்கும் ஏற்படுத்தப்பட்ட லேடி மார்ஜோரி எர்ஸ்கின் அம்மையார் கோப்பையும் (Challenge Cup), மத்திய ஆரம்பப் பாடசாலைகளுக்காக ஏற்படுத்தப்பட்ட ஷீல்டும் (Challenge Shield)

1955-ஆம் வருஷம் ஜூலை மாதம் முதல் தேதியிலிருந்து டிசம்பர் மாதம் 31-ஆந்தேதி வரையிலுள்ள ஆறு மாதங்களுக்குள் ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதிகள் செய்யப்போகும் வேலை நிகழ்ச்சிகளில், மிகச் சிறந்த வேலைக்கு 1956-ஆம் வருஷம் நடக்கப் போகும் சங்கத்தின் வருடாந்திரப் பொதுக் கூட்டத்தில் கப்பும் ஷீல்டும் பரிசாகக் கொடுக்கப்படும்.

**விதிகள்:—**

1. சங்கத் தொகுதியின் அங்கத்தினர்கள் அனைவரும் போட்டியில் சில பகுதியை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று நமூனாக்கள் காண்பிக்க வேண்டும்

2. சங்கத் தொகுதிகளின் மொத்த அங்கத்தினர்களின் பெயரும், நமூனா அனுப்பும் ஒவ்வொரு ஜூனியருடைய பெயர், விலாசம், படிக்கும் வகுப்பு ஆகிய விஷயங்களுடன் கௌரவ உத்தியோகஸ்தர்களின் பெயர்களையும் குறித்தனுப்ப வேண்டும். பள்ளிக்கூடப் பெயர் அட்டவணையிலுள்ள (School roll) மாணாக்கர்களுடைய மொத்த எண்ணிக்கையைக் குறிக்க வேண்டும்.

3. ஆறு மாதங்களில் செய்த வேலைகளின் குறிப்பைச் சங்கத்தொகுதியின் கவுன்சிலர் அல்லது சங்கத் தொகுதியின் கௌரவ உத்தியோகஸ்தர்களில் ஒருவரால் அனுப்புதல் வேண்டும். செய்யும் வேலைகள் கீழே கொடுத்துள்ள பிரிவுகளின்கீழ்ப் பிரிக்கப்பட்டு இருக்க வேண்டும்:—

A. சுகாதார அபிவிருத்தி
   - (i) தம்மைக் குறித்தது
   - (ii) பாடசாலை
   - (iii) ஓர் இன சம்பந்தமாக

B. உழைப்பு (பணி)

C. சர்வதேச அல்லது சர்வ இன நட்பு

4. கௌரவக் காரியதரிசி வைத்திருக்கும் ஜூனியர் ரெட்கிராஸ் கூட்டங்கள் எல்லாவற்றினுடைய அலுவல் அறிக்கைகள் சங்கத் தொகுதியின் தலைவரால் கையெழுத்திடப்பட்டு அனுப்புதல் வேண்டும் அவைகளில் சுகாதார விஷயங்களைச் சேர்க்காமல், தீர்மானம் செய்யப்பட்ட முடிவு

களும், தீர்மானித்த நிபந்தனைகளும், கடைசிக் கூட்டத்திலிருந்து செய்த சேவையின் விவரமும் குறிப்பிட்டிருக்க வேண்டும்.

5. தனிப்பட்ட நபர்களின் சுகாதார ரிக்கார்டுகள், உயரமும், கன அளவுமுள்ள சார்ட்டுகள், மருத்துவ அல்லது பல் பரிசோதனை விவரங்கள்; கண்டு பிடிக்கப்பட்ட தவறுகளையும் நிவர்த்தி செய்யப்பட்ட விவரங்களையும் குறித்திருக்க வேண்டும்.

6. ஜூனியர்கள் வைத்திருக்கும் தனி நோட்டுப் புத்தகங்கள், பள்ளிக்கூட அலுவல் சம்பந்தமான ஆல்பங்கள், முதலுதவி ரிஜிஸ்தர்கள் முதலியவைகளை அனுப்புதல் வேண்டும்.

7. சங்கத் தொகுதி அங்கத்தினர்களால் தயாரிக்கப்பட்ட சுகாதார சம்பந்தமான போஸ்டர்கள், சித்திரங்கள், மூல வாக்கியங்கள் (Mottos), சுகாதார மாதிரிப் பொருள்கள், புகைப்படங்கள் (Photographs), எப்பொழுதும் அனுப்பப்படாத சிறந்த மூல (Original) வியாசங்கள் முதலியவைகளை அனுப்பலாம்

8. எல்லா ஜூனியர் ரெட்கிராஸ் தொகுதிகளும் போட்டியில் சேர்ந்துகொள்ள தகுதி வாய்ந்தவர்கள்.

நுழைவுப் பத்திரங்கள் (Entries) பள்ளிக்கூடத் தலைமையாசிரியர் மூலமாகக் கௌரவக் காரியதரிசி, ஜூனியர் ரெட்கிராஸ், இந்திய ரெட்கிராஸ் சங்கம், சென்னை பிராஞ்சு, எழும்பூர், சென்னை-8 என்ற விலாசத்திற்கு 1956-ஆம் வருஷம் ஜனவரி மாதம் 5-ஆம் தேதிக்குள் அனுப்பப்பட வேண்டும். போட்டியில் கலந்துகொண்ட எல்லா மாணவர்களும் சங்கத் தொகுதியின் அங்கத்தினர்கள் என்று தலைமையாசிரியர் சாட்சிப் பத்திரம் கொடுக்க வேண்டும்.

நுழைவுப் பத்திரங்களைத் தேர்ந்தெடுப்பதுபற்றி சென்னை ராஜ்யப் பிராஞ்சின் ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டியாரின் தீர்ப்பே முடிவானதாகும்.

வெற்றிப் பெற்ற சங்கத் தொகுதி கோப்பை அல்லது ஷீல்டை ஒரு வருடம் வரையில்தான் வைத்திருக்க உரிமை உண்டு.

ஜூனியர்கள் : உங்கள் பள்ளிக்கூடம் இந்த நல்ல சந்தர்ப்பத்தில் கோப்பை அல்லது ஷீல்டைப் பெறுவதற்குரிய முயற்சிக்கான வேலைகளைத் தயார் செய்துகொள்ளுங்கள்.

## (2) லேடி நை பரிசு

### முதலுதவியும் ஹோம் நர்ஸிங் போட்டிகளும்

உயர்தரப் பாடசாலைகள், பயிற்சிப் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள் மாத்திரம

**பரிசுகள் :** ரூ. 40, ரூ. 30, ரூ. 20

1955-ஆம் ஆண்டில் அதிகப்படியான எண்ணிக்கையுள்ள ஜூனியர்களைக் கொண்ட முதலுதவியிலும், ஹோம் நர்ஸிங்கிலும் தேறின ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதிக்கு அளிக்கப்படும் லேடி நை பரிசு.

உள்ளூர் செயிண்டு ஜான் ஆம்புலன்ஸ் பிரிவோடு (Local St. John Ambulance Branch) முதலுதவிக்கும், ஹோம் நர்ஸிங்குக்கும் ஆன எல்லாப் பயிற்சிகளும் சேர்த்து நடத்தப்படும்.

1955-ஆம் வருஷம் ஜூலை மாதம் முதல் தேதியிலிருந்து போட்டி ஆரம்பித்து, டிசம்பர் மாதம் வரையில் நடத்தப்படும். தேர்வுகளில் ஏதாவதொன்றிற்குத் தகுதியுடைய ஜூனியர்களுடைய பெயர்களையும், செயிண்டு ஜான் சங்கம், ரெட்கிராஸ் கட்டடம் (Red-Cross Buildings), மாண்டியத் ரோடு, சென்னை 8ல் இருந்து பெற்ற நற்சாட்சிப் பத்திரங்களின் எண்களையும், அவைகள் கொடுக்கப்பட்ட தேதிகளையும் கவுன்சிலர்கள் இந்தக் காரியாலயத்திற்குத் தெரியப்படுத்த வேண்டும்.

## (3) சென்னை ராஜ்யப் பிராஞ்சு போட்டிகள்

**கவுன்சிலர்கள் .**— பரிசு ரூ. 10.

**விஷயம்**—கீழ்க் கண்டவைகளுள் ஒன்றைப் பற்றிக் கட்டுரை எழுத வேண்டும்:—

'நல்ல ஜூனியர் ரெட்கிராஸ் கவுன்சிலர் ஆவதற்கு வேண்டிய குண விசேஷங்கள் எவை என்று நீ எண்ணுகிறாய் !'

அல்லது

'எதிர்கால வாழ்க்கையை நன்முறையில் நடத்துவதற்கான பயிற்சிகளும், உண்மைக் கல்வி சம்பந்தமாகவே வாழ்க்கை முறையை நன் முறையில் தயாரித்துக்கொள்ளலும்'

அல்லது

'உணவுப் பொருளின் அபிவிருத்தியும், வீணாக்கலைத் தடுத்தலும் ஆகிய இரண்டு செயல்களும் ஒருமித்துச் செய்தல் வேண்டும்.'

ஜூனியர்களுக்கான போட்டிகளில் ஏதாவது ஒன்றில் அவனுடைய அல்லது அவளுடைய சங்கத்

தொகுதி கலந்துகொண்டாலன்றி, எந்தக் கவுன்சிலரும் போட்டியிட முடியாது.

**ஜூனியர்கள்:**—பயிற்சிப் பள்ளிக்கூடங்கள் ரூ. 10.

உயர்தரப் பள்ளிக்கூடங்கள்—

முதற் பரிசு—ரூ. 10

இரண்டாம் பரிசு—ரூ. 5

மத்திய, ஆரம்பப் பள்ளிக்கூடங்கள்—

முதற் பரிசு—ரூ. 10

இரண்டாம் பரிசு—ரூ. 5

ஜூனியர் ரெட்கிராஸ் தொகுதிகளைச் சார்ந்தோர் செய்த சிறந்த கைவேலைக்குப் பரிசுகள் வழங்கப்படும். நமூனக்கள் கீழ்க்கண்ட விஷயங்களைக் கொண்டிருக்க வேண்டும்:—

(1) தேசீயக் கைத்தொழில்கள்

(2) இந்திய முறைப்படிக் கௌரவ ஆடை உடுத்தப்பட்ட பொம்மைகள்

(3) கழிவுப் பொருள்கள் முதலியவைகளினின்றும் செய்யப்பட்ட நல்ல நிர்வாகப் பயனுள்ள பொருள்கள்.

(4) நம் நாட்டுத் தபால் வில்லைகள் (Stamps) அல்லது நெருப்புப்பெட்டி லேபில்கள் ஆகியவைகளைச் சேர்த்தல்.

(5) வர்ணச் சித்திரங்கள் தீட்டுதல்

(6) நிழற்படம் எடுத்தல்

(7) தேசப் படங்கள்

(8) பூ சித்திர வேலைகள்

**விதிகள்—**

1 சங்கத் தொகுதிகள் எத்தனை நமூனக்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம். ஆனால் மேலே சொல்லிய பொருள்களில் குறைந்தபட்சம் நான்கு பொருள்களுக்குக் குறையக் கூடாது.

2. இது ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதிக்காக ஆரம்பிக்கப்பட்ட சங்கத் தொகுதிப் போட்டி ஆகையினால், தனிப்பட்டவர்களின் பெயர்களைக் குறிக்காமல் சங்கத் தொகுதிப் பெயரையே ஒவ்வொரு நமூனக்களிலும் குறிக்க வேண்டும்.

3. பிறர் உதவியில்லாமல் ஜூனியர்களாலேயே செய்யப்பட்ட வேலை என்று ஒவ்வொரு நமூனவும் கவுன்சிலரால் நற்சாட்சி அளிக்கப்பட வேண்டும்.

4. சங்கத் தொகுதியின் முழு விலாசத்துடன், (Complete address) அதனுடைய ரெஜிஸ்திரேஷன் எண்ணையும் ஒவ்வொரு நமூனவிலும் தெளிவாகக் குறிக்கப்பட வேண்டும்.

5. நமூனக்கள் திருப்பி அனுப்பப்படமாட்டா. சிறந்த காட்சிப் பொருள்கள் சர்வதேசக் கண்காட்சியில் பங்கு கொள்ள அனுப்பப்பட வேண்டும் என்று உத்தேசிக்கப்பட்டுள்ளது. எஞ்சிய காட்சிப் பொருள்கள் மருத்துவசாலைகளிலுள்ள குழந்தைகளுக்கான பிரிவுகளுக்கும், குழந்தைகள் பராமரிப்பு விடுதிகளுக்கும், இவை போன்ற மற்றவைகளுக்கும் அனுப்பப்படும்.

6. எல்லா நமூனக்களும் கீழே கொடுத்துள்ள விலாசம் உடைய காரியாலயத்தில் 1956-ஆம் வருஷம் ஜனவரி மாதம் 5-ஆம் தேதி வரையில் பெற்றுக்கொள்ளப்படும் :—

கௌரவ டயரெக்டர்,
ஜூனியர் ரெட்கிராஸ்,
இந்திய ரெட்கிராஸ் சங்கம்,
சென்னை ராஜ்யப் பிராஞ்சு,
எழும்பூர், சென்னை-8.

---

## ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதிகள் வேலை செய்யும் கல்வி ஸ்தாபனங்களின் எல்லாத் தலைமை உபாத்தியாயர்களுக்கும்

"மதருஸ் ஜூனியர்" சஞ்சிகைகள் ஒழுங்காகத் தங்களுக்கு வருகிறதில்லையென்று ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதியின் கவுன்சிலர்கள் சிலரிடமிருந்து முறைப்பாடுகளை நாங்கள் பெற்றிருக்கிறோம். அச்சிடுபவர்களிடமிருந்து சஞ்சிகைகள் வரப்பெற்றவுடனே, அவைகள் உடனே சங்கத் தொகுதிகளுக்கு நிச்சயமாக அனுப்புவதற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்துகொண்டிருக்கிறோம். அவ்வாறிருக்க, அத்தகைய முறைபாடுகளை நாங்கள் பெற்று வருவது குறித்து மிகவும் ஆச்சரியப்படுகிறோம். எனவே, சஞ்சிகைகள் அச்சிடப்பட்டு வந்ததும், எக்காரணத்தை முன்னிட்டும் ஒரு வாரத்திற்குமேல் நாங்கள் வைத்துக்கொள்வது இல்லை. ஆகையினால், அதன் காரணத்தைக் கண்டு பிடிக்க முயன்றோம். சங்கத் தொகுதிகள் சஞ்சிகைகள் பெறுமைக்குச் சில பள்ளிக்கூடங்களின் தலைமை உபாத்தியாயர்கள்தான்

காரணம் என்று கண்டுபிடித்து, அதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறோம். ஒவ்வொரு சங்கத் தொகுதிக்கும் சஞ்சிகைகளைப் பகிர்ந்து கொடுக்குமாறு நாங்கள் அவைகளைத் தலைமை உபாத்தியாயர்களுக்கு அனுப்புகிறோம். ஆனால் அவர்கள் அவைகளைப் பங்கிடு செய்யாமல், தங்கள் அலுவலகங்களிலேயே (Offices) வைத்துக்கொள்கின்றார்கள். அதனால் எங்களால் நடத்தப்பட்டு வரும் போட்டிகளில் சில ஊக்கமுள்ள சங்கத் தொகுதிகள் கலந்துகொள்வதற்கு முடியாமலும், ஜூனியர் ரெட்கிராஸ் வேலைகளைப் பற்றி அவ்வப்பொழுது வெளியிடும் எங்கள் கட்டளைகளை நிறைவேற்ற முடியாமலும் இருக்க நேரிடுகிறது. ஆகையால் சஞ்சிகைகளையும், மற்ற கடிதப் போக்குவரத்துகளையும் அடிக்கடி எங்கள் அலுவலகத்திலிருந்து பெற்றுக்கொண்டு, அவைகளைப் பார்வையிட்டதும் கவுன்சிலர்களுக்கு உடனே அனுப்புமாறும், இவ்விஷயங்களில் தலைமை உபாத்தியாயர்கள் எங்களுடன் சேர்ந்து ஒத்துழைக்குமாறும் நாங்கள் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறோம். ஜில்லா ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டிகளின் கன்வீனர்களுங்கூடச் சங்கத் தொகுதிகளுக்குச் சஞ்சிகைகள் அனுப்பத் தாமதம் செய்வதாக எங்களுக்குத் தெரியவருகிறதனால், இனி அவர்களும் தாமதம் செய்யாது அவ்வப்பொழுது சஞ்சிகைகளை அனுப்பியும், எங்களுடன் இவ்விஷயத்தில் ஒத்துழைக்குமாறும்' அவர்களையும் கேட்டுக்கொள்ளுகிறோம்.

## நமது எல்லாக் கவுன்சிலர்களுக்கும் சங்கத் தொகுதிகளுக்கும்

சில சங்கத் தொகுதிகளின் சேவைகளைப்பற்றிய செய்திகளை "மதராஸ் ஜூனியரில்" பிரசுரிக்கவில்லை என்னும் முறைபாடுகளையுங்கூட நாங்கள் பெற்றிருக்கின்றோம். பிரசுரிப்பதன் பொருட்டுத் தம்முடைய செய்திகளை அனுப்பினதற்காக நாங்கள் அவைகளைப் பாராட்டின போதிலும், சஞ்சிகையில் இத்தகைய செய்திகளைப் பிரசுரிப்பதற்கு வேண்டிய இடம் வரையறுக்கப்பட்டிருந்ததனால், நாங்கள் பெற்றுக்கொள்ளும் எல்லாச்செய்திகளையும் பிரசுரிக்க நாம் விரும்பியும் பிரசுரிக்க முடியாமைக்கு வருந்துகிறோம். எனவே, சங்கத் தொகுதிகள் எங்கள் சங்கடத்தைத் தெரிந்து கொண்டிருக்கும் என்பதும், அவைகளுடைய செய்திகள் "மதராஸ் ஜூனியரில்" வெளியிடாமலிருப்பதைக் கண்டதும் ஏமாற்றமடையாமலிருக்கும் என்பதும் எங்களது முழு நம்பிக்கையாகும். மேலும் சஞ்சிகையில் அவைகளுடைய செய்திகள் பிரசுரிக்கப்படாமல் இருந்தாலும், உலக முழுவதும் நடைமுறையிலிருந்து வரும் ரெட்கிராஸ் சங்கத்தின் அங்கத்தினர்களுக்குரிய நற்செயல்களைச் செய்வதுபற்றி நாங்கள் அவைகளைப் புகழ்கிறோம் என்பதை அவைகள் தெரிந்துகொண்டிருக்கும் என்று நாங்கள் நினைக்கிறோம்.

## நன்கொடை

மங்களூர், கங்கநாடி மொகாரு, ஜெப்பினுவிலுள்ள U. B. M C. ஆரம்பப் பாடசாலை ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதி ஜனங்களின் வெள்ள நிவாரணத்திற்காக ரூ. 6—8—0ஐ நன்கொடையாக எமக்கு அனுப்பிற்று. திருநெல்வேலி ஜில்லாவில் முக்குபேரி என்னும் ஊரில் உள்ள இந்து கிறிஸ்தவ உயர்தர ஆரம்பப் பாடசாலை ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதியுங்கூட வெள்ள நிவாரணத்திற்காக ரூ. 2/-ஐ நன்கொடையாக அனுப்பிற்று. ஆகையினால், நன்கொடையளித்த சங்கத் தொகுதிகளுக்கு நாங்கள் நன்றி செலுத்துகிறோம். அவைகள் அளித்த நன்கொடைகள் எக்காரியத்திற்காக அனுப்பப்பட்டனவோ, அக்காரியத்திற்காகவே உபயோகிப்பதற்குப் புது டெல்லியிலுள்ள எமது தலைமைக் காரியாலயத்திற்கு அனுப்பப்பட்டன என்பதை நாங்கள் அவைகளுக்கு அறிவித்துக்கொள்ளுகிறோம்.

## விலாச மாற்றம்

இராமநாதபுரம், ஜில்லா ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டியின் கன்வீனர் திரு. R. நாராயணன் அவர்கள், தமது விலாச மாற்றத்தைக் கீழே குறிப்பிட்டுள்ளார் :—

தலைமை ஆசிரியர், முஸ்லிம் உயர்தரப் பாடசாலை,
அபிராமம், இராமநாதபுரம் ஜில்லா.

ஆகையினால், ஜூனியர் ரெட்கிராஸ் சம்பந்தமான எல்லாக் கடிதப் போக்குவரத்துக்களையும் மேலே சொல்லிய விலாசத்திற்கே அனுப்புதல் வேண்டும் என்று இராமநாதபுரம் ஜில்லா ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதிகள் கேட்டுக்கொள்ளப்படுகின்றன.

## ஜில்லா ரெட்கிராஸ் பிராஞ்சுகளிடமிருந்தும் ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டிகளிடமிருந்தும் கிடைக்கப்பெற்ற செய்திகள்

**கோயமுத்தூர்—**

1955-ஆம் வருஷம் மே மாதம் 8-ஆந்தேதியன்று பள்ளிக்கூட டிவிஷனல் இன்ஸ்பெக்டர் திரு. V. T. டைட்டஸ் (V. T. Titus) அவர்களின் தலைமையில் பிராஞ்சு நமது சங்கஸ்தாபகர் ஹென்றி டியூனண்டின் (Henri Dunant) பிறந்த நாளைக் கொண்டாடிற்று. அப்பொழுது கோயமுத்தூர் பிஷப் Rt. ரெவரெண்டு சவுரிமுத்து (Rt. Rev. Sawrimuthu) அவர்களும் கோயமுத்தூர் ஜில்லா போர்டு உபதலைவர் திரு. T. S திப்பய்யா (T. S. Thippiah) அவர்களும் ஸ்தாபகரைப் பற்றியும், ஜூனியர் ரெட்கிராஸ் பற்றியும், அதன் நடைமுறைகளைப்பற்றியும் பேசினார்கள். ஜில்லா ரெட்கிராஸ் பிராஞ்சின் கூட்டுக் காரியதரிசி திரு. S. R. சந்திரன் அவர்கள் வந்தனோபசாரம் கூறினவுடன் விழா முடிந்தது.

**மதுரை—**

### பழனி தாலூக்காப் பிராஞ்சு

இந்தத் தாலூக்காவிலுள்ள சில பள்ளிக்கூடங்கள் ஐக்கிய நாடுகளின் குழந்தைகள் சகாயநிதி ஸ்தாபனத் (UNICEF)திலிருந்து நன்கொடையாகப் பெற்றுக் கொண்ட அரிசியைக்கொண்டு பசியுள்ள ஏழைப் பள்ளிச் சிறுவர்களுக்குச் சில நாட்கள் உணவு அளித்தன என்று எங்களுக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது. சிவகிரிப் பள்ளி (Sivagiripalli) நெய்காரப் பள்ளி (Neikarapalli), கோட்டயம் (Kottayam) ஆகிய ஊர்களிலுள்ள பள்ளிக்கூடங்கள்கூட, ஏழைப் பள்ளிச் சிறுவர்களுக்குச் சாப்பாடு போட்டு வருகின்றன.

**நீலகிரி-கூனூர்—**

ஜில்லாப் பிராஞ்சு, ஜூனியர் ரெட்கிராஸ் கவுன்சிலர்களின் வாராந்திரப் பயிற்சி வகுப்பை இரண்டாம் முறையாகக் கோட்டகிரியில் நடத்திற்று. இவ்வகுப்பு 1955-ஆம் வருஷம் ஜனவரி மாதம் 10-ஆந் தேதி முதல் மார்ச்சு மாதம் 7-ஆந்தேதி வரையில் நடத்தப்பட்டது. 1955-ஆம் வருஷம் ஜனவரி மாதம் 10-ஆந்தேதியன்று ஜில்லாக் கல்வி அதிகாரியால் (The District Educational Officer) பயிற்சி வகுப்பு ஆரம்பித்து வைக்கப்பட்டது. இவ்வகுப்பில் 51 ஆசிரியர்கள் பயிற்சி பெற்றுத் தேர்ச்சியடைந்தார்கள். இது சம்பந்தமாகப் பயிற்சியாளர்களாலும், ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதிகளாலும் தயாரிக்கப்பட்ட கைத்தொழிற்பொருள்கள், பொம்மைகள், போஸ்டர்கள் முதலியவைகள் அடங்கிய கண்காட்சி நடத்தப் பெற்றது. கோட்டகிரிப் பஞ்சாயத்துப் போர்டுத் தலைவர் அவர்கள் கண்காட்சியைத் திறந்து வைத்தார்கள். கண்காட்சிச் சாலைக்குப் பலர் விஜயஞ்செய்து, கண்காட்சிப் பொருள்களைப் பார்வையிட்டு மகிழ்ச்சியடைந்தார்கள். அக்கண்காட்சியில் ஜூனியர் ரெட்கிராஸ் வேடிக்கைக்காட்சிகளும், சிறு நாடகங்களும் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டது.

**கிழக்குத் தஞ்சாவூர், நாகப்பட்டினம்—**

1955-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் முதல் தேதியன்று சப்-கமிட்டி ஒரு கூட்டம் நடத்திற்று. அக்கூட்டத்திற்கு ஜில்லாக் கல்வி அதிகாரி ஸ்ரீமதி S. துரைசாமி அவர்கள் அக்கிராசனம் வகித்தார்கள். முதல் முதலாக இக்கூட்டம் நடத்தப்பட்டதனால், சங்க அங்கத்தினர்கள் புதிய அக்கிராசனாதிபதியை அமோகப் பிரியத்துடன் வரவேற்று உபசரித்தார்கள். அக்கிராசனாதிபதி தமது பிரசங்கத்தில் கமிட்டி முன்னால் செய்த உண்மையான சேவைகளைப் பாராட்டி, ஜில்லாவில் ஜூனியர் ரெட்கிராஸ் சேவைகள் பரவுவதற்குத் தம்மால் இயன்ற முழு உதவி செய்வதாக உறுதிமொழி கூறினார். கமிட்டி அக்கூட்டத்தில் பல தீர்மானங்களை அங்கீகரித்தது. அவைகளில் குறிப்பிடுவதற்கு முக்கியமானவைகள் பின் வருமாறு:—

1. ஜில்லா போர்டுப் பள்ளிக்கூடங்கள், முனிசிபாலிட்டிப் பள்ளிக்கூடங்கள் ஆகியவைகளின் தலைமையாசிரியர்கள், தங்கள் நிருவாகத்தின்கீழுள்ள பள்ளிக்கூடங்கள் எல்லாவற்றிலும் ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதிகளை ஆரம்பிக்குமாறு ஜில்லா போர்டு பிரசிடென்டும், ஜில்லாவிலுள்ள நான்கு முனிசிபாலிட்டிகளின் கமிஷனர்களும் தலைமையாசிரியர்களுக்குக் கட்டளையிட வேண்டும். இதுபற்றிப் பிரசிடென்டுக்கும், கமிஷனர்களுக்கும் அறிவிக்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது.

2. செகண்டரிப் பள்ளிக்கூடங்களிலும், பயிற்சி பெறும் பள்ளிக்கூடங்களிலும் ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதியை ஆரம்பித்து, அவைகளை நிச்சயமாக ரெஜிஸ்தர் செய்துகொள்ள வேண்டும் என்று அவைகளின் தலைவர்களுக்குத் தெரிவிக்கத் தீர்மானிக்கப்பட்டது

3. பேஸிக் ரேஞ்சஸ் இன்ஸ்பெக்டர்கள் உள்ளிட்ட ஜில்லாவிலுள்ள பள்ளிக்கூடங்களின் டெபுடி இன்ஸ்பெக்டர்கள் தங்கள் அதிகாரத்திலுள்ள பள்ளிக்கூடங்

கள் எல்லாவற்றிலும் ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதிகளை ஆரம்பித்து, ஒழுங்காக நடத்துமாறு அவர்களைக் கேட்டுக்கொள்ளத் தீர்மானிக்கப்பட்டது.

4. 1955-56-ஆம் வருஷங்களில் ஜூனியர் ரெட்கிராஸ் கவுன்சிலர்களுக்காக இரண்டு பயிற்சி வகுப்புகள், அதாவது ஒன்று திருவாரூரிலும் மற்றொன்று மாயூரத்திலும் நடத்தத் தீர்மானிக்கப்பட்டது.

5. தரங்கம்பாடியில் குருக்கத்தியில் உள்ள பயிற்சிப் பள்ளிக்கூடங்களிலும், தமிழ் இவாஞ்சிலிகல் லூத்தரன் சர்ச் (T. E. L. C) பயிற்சிப் பள்ளிக்கூடங்களிலும் ரெட்கிராஸ் பயிற்சி வகுப்புகள் ஆரம்பிக்கத் தீர்மானிக்கப்பட்டது.

6. ஆரம்ப செகண்டரிப் பாடசாலைகளிலுள்ள ஜூனியர் ரெட்கிராஸ் கவுன்சிலர்களுக்காக ரெட்கிராஸ் சம்பந்தமான முக்கிய குறிப்புகளைப் புஸ்தக ரூபமாக வெளியிட்டு வழங்க நிச்சயம் செய்யப்பட்டது.

---

## போக்குவரத்து விளையாட்டுகள்

குழந்தைகள் விரும்பிய விளையாட்டுகளின் மூலமாகவே அவர்களுக்குச் சாலை விதிகளை அறிவித்து, அவர்கள் அவைகளை நன்கு தெரிந்துகொள்ளும்படிச் செய்ய வேண்டுவதே இவ்விளையாட்டுகளின் நோக்கமாகும். ஆகையினால் குழந்தைகள் அனைவரும் சாலை ஓரங்களில் இருக்கும் நடைபாதைகள், மற்ற இடங்கள் ஆகியவைகளில் தங்களுக்கும், மற்றவர்கள் பாதுகாப்புக்கும் உரியதாகுமாறு அவர்கள் எவ்வித் முயற்சியுமின்றித் தாங்களாகவே விதிகளை அனுசரித்து அடிக்கடி விளையாட வேண்டும்.

இவ்விளையாட்டுகளில்—

ஒரு குழந்தை பாதசாரியாகவும் ;

இரண்டு குழந்தைகள் மோட்டார் வண்டியாகவும்;

மூன்று குழந்தைகள் தீயணைக்கும் என்ஜினுகவும் ;

நான்கு குழந்தைகள் பஸ் அல்லது லாரியாகவும் ;

இரண்டு குழந்தைகளும் ஒரு ஸ்டெச்சரும் ஆம்புலன்ஸாகவும் நடிக்க வேண்டும்.

நிஜ விளையாட்டாகப் பாவித்து விளையாடுவதற்காக மிகப் பொருத்தமான காகிதத் தொப்பிகளையும், கவசங்களையும் அணிந்துகொள்ளலாம். இப்பொருள்களைச் செய்வதால், தற்காலிகமாகக் குழந்தைகள் தங்கள் காலத்தை நல்வழியில் செலவழிக்கக் கூடும்.

குழந்தைகளில் முதன்மையானவன் மோட்டார் வண்டி ஓட்டுபவனுகப் பாவனை செய்துகொண்டு தப்பில்லாமல் சரியான விதிகளின்படி கைகளினுல் சைகைகளையும், எச்சரிக்கைகளையும் செய்ய வேணடும். உதாரணமாக மோட்டார் ஹாரனை ஊதி எச்சரிக்கை சப்தங்களைச் செய்ய வேண்டும்.

வண்டிகளாகப் பாவனை செய்யும் குழந்தைகள் இந்திய வரிசையில் சாலையில் ஒருவர் பின் ஒருவராக, அவரவர்களுக்கு எதிரிலுள்ள குழந்தைகளின் தோள்களின்மேல் கைகளை வைத்துக்கொண்டு வரிசையாகச் செல்ல வேண்டும் இந்த விளையாட்டுகள் அனைத்திலும் வண்டிப் போக்குவரத்தை அனுசரிக்க வேண்டும்.

முறைப்படி வரையப்பட்ட பிளான்களின்படி குறிக்கப்பட்ட விளையாட்டு மைதானத்தில் இவ்விளையாட்டுகளைச் சிறப்பாக நடத்திக் காட்ட வேண்டும்.

**விளையாட்டு 'A'** : பாடசாலை விளையாட்டு மைதானத்தில் நடைபாதையின்றி நேராகச் செல்லும் சாலையின் ஒரு பகுதியைக் குறித்துக்கொண்டு கீழே கொடுத்துள்ள செய்கைகளின்படி பிள்ளைகள் நடித்தல் வேண்டும்:—

(a) நடந்து செல்பவர்கள் சாலையின் ஓரத்தில் வண்டிப் போக்குவரத்திற்கு எதிர்ப்புறமாக, அதாவது அவர்களுக்கு வலது பக்கங்களில், நடந்து செல்லல்.

(b) மேலே குறித்ததுபோன்று, ஆனுல் இரவில் நடந்து செல்பவர்கள் வெள்ளை நிறமுள்ள ஆடைகளை அணிந்துகொள்ளுதல் இது முடியாவிட்டால், தங்கள் கழுத்திலோ கைகளிலோ வெள்ளை கைக்குட்டையைக் கட்டிக்கொள்ளுதல். அல்லது ஹரிக்கேன் விளக்கை எடுத்துச் செல்லுதல்.

பள்ளிக்கூடப் பாதைகளிலும், ஏற்றமான இடங்களிலும், நடைபாதைகளிலும் இடது புறத்தையே பிள்ளைகள் குறியாக வைத்துக்கொள்ள வேண்டும். சாலையில் நடக்கும்பொழுது எப்பொழுதும் சாலையின் இரண்டு ஓரங்களில் அமைக்கப்பட்டுள்ள நடைபாதையை உபயோகித்தல் வேண்டும் நடைபாதைகள் இல்லாவிட்டால், எதிர்ப்புறத்தில் வரும் வண்டிகளைப் பார்க்கத் தகுந்த நிலையில் சாலையின் ஓரத்திலேயே நடந்து செல்லுதல்.

**விளையாட்டு B** : பாடசாலை மைதானத்தில் நடைபாதையுள்ள சாலையைக் குறித்துக்கொண்டு, கீழே கொடுத்துள்ள செய்கைகளுக்கு ஏற்றபடி பிள்ளைகள் நடித்துக் காட்ட வேண்டும் :—

(a) சாலையின் நடைபாதையில் இடப்புறமாகவே எதிர்ப்புறம் வரும் வண்டிகளைப் பார்க்கத்தகுந்த நிலையில் பாதசாரி நடந்து செல்லுதல்.

(b) பழத்தோல்கள், உடைந்த கண்ணாடித் துண்டுகள், செங்கல் துண்டுகள் முதலியவைகளை நடைபாதையில் போடுதல்; சிறு வியாபாரம் செய்பவர்கள் தங்கள் சாமான்களை நடைபாதையில் வைத்து விற்பது.

பாதசாரிகள் நடைபாதையில் நடந்து செல்லும் பொழுது, ஆபத்து தரக்கூடிய பொருள்கள் வழியில் காணப்பட்டால், அவைகளை எடுத்து சாலை ஓரங்களில் உள்ள சாக்கடையில் போடுதல். சாக்கடை இல்லாவிட்டால், குப்பைத் தொட்டிகளில் போடுதல். நடைபாதைகளில் விற்கும் பண்டங்களை வாங்குவதற்கு மறுக்க வேண்டும்.

(c) மழை பெய்துகொண்டிருத்தல்; பாதசாரிகள் அப்பொழுது குடைகளுடன் வெளியே செல்லுதல், பாதசாரிகள் தாங்கள் போகும் இடங்களைச் சரியாகப் பார்த்துக்கொள்வதற்குக் குடைகளை நேராகவும் உறுதியாகவும் பிடித்துக்கொண்டு போகுதல்; ஒருவரையொருவர் முந்தும்பொழுது, ஒன்றோடொன்று இடிபடுவதைத் தடுக்கும் பொருட்டு, பாதசாரி ஒரு புறமாகக் குடையைச் சாய்த்துக்கொண்டு செல்லுதல்.

(d) மேலே சொல்லிய செய்கைகளுக்கு எதிர்ப்புறமான காரியங்களை இப்பொழுது நடித்துக் காட்ட வேண்டும். உதாரணமாக,

*(1)* உடைந்த புட்டியினால் பாதசாரி தன்னுடைய காலில் காயப்படுத்திக்கொள்ளுதல்; முதல் உதவி செய்பவர்கள் உடனே அப்பாதசாரியைக் கவனித்து ஆர்ட்டரி முதலிய இரத்தக் குழாய்களிலிருந்து பீறிட்டுக்கொண்டு வரும் இரத்தத்தைத் தடுத்து, காயத்தைக் கட்டி, மருத்துவசாலைக்குக் காயமடைந்தவரை அழைத்துக்கொண்டு போகுதல்.

*(2)* பாதசாரி வாழைப்பழத் தோல் சறுக்கி விழுந்து கால் எலும்பு முறிந்து போகுதல். உடனே முதல் உதவி செய்பவர்கள் அவ்விடத்திற்கு வந்து அப்பாதசாரியைக் கவனித்தல்.

*(3)* சாலையில் பாதசாரி குடையைக் கோணலாகப் பிடித்துக்கொண்டு எதிரே வருபவர் கண்ணில் குத்துதல், உடனே முதல் உதவி செயலாளர்கள் அவ்விடம் வந்து கண்ணில் காயமுற்றவரைக் கவனித்து ஆவன செய்தல்.

**'C' விளையாட்டு:** நேராகச் செல்லும் சாலையில் அதனுடன் குறுக்கு சாலை வந்து கலக்குமாறு குறித்தல். முன் மாதிரியே வண்டிப் போக்குவரத்தையும் ஏற்பாடு செய்தல். சாலையில் நடைபாதையிருந்தால் நடைபாதையிலும், நடைபாதை இல்லாவிட்டால் சாலையின் ஓரத்திலும் நடத்தல். பின்பு பொது விதிகளை அனுசரித்து, நான்கு திக்கிலும் செல்லும் சாலைகள் சந்திக்கும் இடத்தில் நடந்து செல்பவர்கள் குறுக்கே செல்லுதல். அவர்கள் அனுசரிக்க வேண்டிய பொது விதிகள் பின் வருமாறு:—

நடைபாதையிலாவது, நடைபாதையில்லா விட்டால் சாலையின் ஓரமாகவாவது **நின்று நிதானித்தல்.**

வண்டிப் போக்குவரத்து எதிர்ப்படக் கூடிய (முக்கியமாக மூலையிலிருந்து திரும்பும் வண்டிப் போக்குவரத்து) **வலது பக்கத்தைப் பார்த்தல்.** வண்டிப் போக்கு வரவு குறைந்து, சாலையில் வண்டிகள் வரவில்லையானால், சுறுசுறுப்புடன் வேகமாய் நடந்து சாலையின் நடுவில் சேர்தல்.

எதிர்ப்புறத்திலுள்ள சாலையைக் கடந்து செல்வதற்கு **இடது பக்கம் பார்த்தல்.** பின்பு வண்டிப் போக்குவரத்து குறைந்ததும், சாலையின் குறுக்கே வேகமாகச் சென்று, எதிர்ப்புறத்திலுள்ள நடைபாதையிலாவது அல்லது சாலையின் ஓரத்திலாவது சேர்ந்து, சமய சந்தர்ப்பத்திற்குத் தகுந்தபடி நடந்து, நினைக்கும் இடத்தைச் சேர்தல்.

நடந்து செல்பவருக்குச் சாலையைக் கடத்தல் முக்கியமான செய்கையாகயிருப்பதனால், சாலையைக் கடந்து செல்வது பற்றிய குறிப்புகளைக் கற்பிப்பது மிகவும் அவசியமானது ஒவ்வொருவரும் சுயேச்சையாக அடிப்படையான வழக்கத்தில் கொண்டு வரும்படி இப்பழக்கத்தைச் செய்துகொள்ளுதல் மிகவும் நல்லது. இந்தப் பழக்கத்தை முயற்சியுடன் பழகிக்கொள்ள வேண்டுமானால், இது சம்பந்தமாகக் குழந்தைகளை முழுவதும் பயிற்றுவிக்க வேண்டுவது மிகவும் அவசியம். உதாரணமாக,

தேகப் பயிற்சி செய்வதற்காகக் கூடுவதைப் போன்று, சாலையின் நடைபாதையிலாவது அல்லது சாலையின் ஓரத்திலாவது வகுப்பு முழுவதும் ஒன்றாகக் கூட வேண்டும். அப்பொழுது ஒவ்வொரு பிள்ளையும் 'நான நிற்கிறேன், நான் பார்க்கிறேன், நான் நிதானமாகக் கவனிககிறேன், நான் வலது பக்கம பார்த்து நடக்கிறேன், நடக்கிறேன், நடககிறேன. நான் இடது பக்கம் பார்தது நடககிறேன், நடக்கிறேன், நடககிறேன்' என்று திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டும். எனவே, பிள்ளைகளின் நன்மைக்காகத் தங்கள் தங்கள் மொழிகளில் பாட்டாக எழுதி, அவர்கள் அதைப் பாடிக்

கொண்டே எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருக்க வேண்டும். உதாரணமாக,

குறுக்கே வீதியைக் கடக்கும் முன்னர்
குறிகளைப் பார்த்துக் கவனமா நட.
கண்ணைக் காதைக் கவனமாக் கொண்டே
கால்களை வீசிக் கடுக நட.
சாலை தட்டுத் தடங்கல் இன்றி
இருக்கும் சமயம் இனிது நட.
போக்கு வரவு அற்ற போது
வலது பார்த்து வளமுடன் நட.
போக்கு வரவு அற்ற போது
இடது பார்த்து இன்புடன் நட.
இந்த விதிகளை இனிது கொண்டால்
அச்சம் நடக்கையில் அணுகல் இலையே.

மேலே சொன்ன விதிகளை அனுசரியாமல் சாலையைக் கடந்து செல்வதைப் போலவும், அதனுல் உண்டாகும் பயன் தோன்றுமாறும் செய்து காட்ட வேண்டும். உதாரணமாக,

1. சாலையின் குறுக்கே ஓடுதல், அப்பொழுது அகஸ்மாத்தாகத் தவறிக் கீழே விழுதல், உடனடியாகச் சாலையில் வந்த மோட்டார்கார் மேலே ஏறி ஓடுதல்.

2. சாலைகள் சந்திக்குமிடங்களுக்கு இடையில் கடக்கும்பொழுது வண்டி மேலே ஏறி ஓடுதல்.

3. சாலையின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்கு நடந்து சாலையைக் கடக்கும்போது வண்டி மேலே ஏறுதல்.

4. சாலையைக் கடக்கும்பொழுது ஆபத்தில் அசைவற்று நிற்பதன் அவசியம்.

5. சாலையில் விட்டிருக்கும் மோட்டார் வண்டிகளுக்கு இடையே கடந்து சென்று ஆபத்தில் சிக்கிக் கொள்ளுதல்.

'D' விளையாட்டு : முன் விளையாட்டுகளில் செய்தது போலவே சித்தப்படுத்திக்கொள்ள வேண்டும். சாலைகள் சந்திக்குமிடத்தில் 'போக்குவரத்தை ஒழுங்கு செய்வதற்காக' வண்டிப் போக்குவரத்தை ஒழுங்குபடுத்தும் போலீஸ்காரரை நிறுத்தி வைத்தல்.

1. போக்குவரத்துப் போலீஸ் சைகைகளுக்கு ஏற்ப, நடந்து செல்பவர்கள் சாலையைக் கடத்தல்; மேலும், அவர்கள் **'நிற்றல், பார்த்தல், கவனித்தல்'** முதலிய வழக்கமான விதிகளுக்கு உட்பட்டு சாலையை எப்பொழுதும் கடந்து செல்லுதல்.

2. சாலையைக் கடந்து போவதனுல் உண்டாகும் நன்மையைத் தெரிந்துகொள்வதற்காகப் போக்குவரத்துக் கட்டுப்பாட்டைத் (Traffic Control) தத்ரூபமாய் நடித்துக் காட்ட வேண்டும்.

'E' விளையாட்டு : நேராகச் செல்லும் சாலையைக் குறிக்க வேண்டும்; அதில் நடந்து செல்பவர் சாலையைக் கடந்து போவதைக் காட்டுவதுடன், மத்தியில் ஒரு இடத்தையும் ஒரு தீவுபோல் காட்ட வேண்டும். வண்டிப் போக்குவரத்து மார்க்கங்களை எப்பொழுதும் போலவே காட்ட வேண்டும்.

1. **'நிற்றல், பார்த்தல், கவனித்தல்'** முதலிய வழக்கமான விதிகளை நடந்து செல்பவர் **எப்பொழுதும்** அனுசரித்தே சாலையின் சந்திப்புகளில் சாலையைக் கடத்தல்; அல்லது கடந்து சென்று குறிப்பிட்ட இடத்தைச் சேருதல்.

2. நடந்து செல்கிறவர் மற்ற இடங்களில் சாலையைக் கடக்கும் சமயத்தில், மேலே மோட்டார் ஏறிச் சென்றதனுல் ஏற்படும் பயன்களை ரூபித்துக் காட்டல்.

3. குருட்டு மனிதன் அல்லது குழந்தைகள் சாலையின் பக்கத்தில் நின்றுகொண்டிருத்தல். போக்குவரத்து விதிகளை உணர்ந்து நடந்து செல்லும் பழக்கமுள்ள ஒருவர் அவன் அல்லது அவர்கள் இருக்குமிடஞ் சென்று, "சாலையைக் கடப்பதற்கு நான் உதவி செய்யலாமா?" என்று கேட்க வேண்டும். அப்பொழுது அவன் அல்லது அவர்கள் ஒப்புக்கொண்டால், நடந்து செல்பவருக்கு அதிகமாகச் செய்ய வேண்டிய கடமை ஒன்று ஏற்படுகிறது. அதனுல் அவர் இரண்டுவிதக் கருத்துக்களுடன் (அதாவது தன்னைக் காப்பாற்றிக்கொள்ளுதலும் தன்னுல் உதவி பெறுபவரைக் காப்பாற்றுதலும்) காரியத்தைச் செய்து முடித்தல்.

C. D. E. விளையாட்டுகள் (தொடர்ச்சி) : நீண்ட சாலையைக் குறித்து, அதில் போலீஸ் கட்டுப்பாடு உடைய இடத்தைக் கடந்து செல்லுதலையும், போலீஸ் கட்டுப்பாடு இல்லாத இடத்தைக் கடந்து செல்லுதலையும், சாலைகள் சந்திக்கும் இடத்தில் கடந்து செல்லுதலையும் மத்தியில் ஒரு 'தீவை'யும் காட்ட வேண்டும்.

வண்டிப் போக்குவரத்தை அமைத்துக்கொண்டு முன்மாதிரி செய்து காட்டினது போலவே நடந்து செல்பவர்களால் தத்ரூபமாய்ச் செய்து காண்பித்தல்.

பஸ்ஸுகள் நிற்கும் இடங்களைக் குறித்தல்; வண்டிப் போக்குவரத்தையும், நடந்து செல்பவரையும் முன்மாதிரி குறித்துக்கொள்வதுடன் எதிரெதிராகப் போவது போல இரண்டு பஸ்ஸுகளையும் குறித்தல். பின்பு கீழே சொல்லியுள்ள விஷயங்களைத் தத்ரூபமாகச் செய்து காட்ட வேண்டும்.:—

1. பஸ் நிற்கும் இடத்தின் மேடையில் 'கியூ' வரிசையில் நின்று சிறிது சிறிதாக முன்னால் செல்லும் அவசியத்தைக் காண்பித்து, பஸ் வந்து நிற்குமளவும் காத்துக்கொண்டிருத்தல்.

2. பஸ்ஸிலிருந்து கீழே இறங்குவது ; பஸ் குறிப்பிட்ட ஓர் இடத்தில் நிற்கும் வரையில் வண்டியிலிருந்து இறங்குவதற்காகக் காத்திருக்கும் அவசியத்தையும், வண்டி நின்றதும், அதன் முன்பாகத்தில் இறங்குவதற்காக ஏற்படுத்தப்பட்ட வழியில் இறங்குவதையும் காட்ட வேண்டும்.

3. சாலையைக் கடந்து எதிர்ப்புறம் போகும் முன் பஸ் முதலிய வண்டிகள் வருகின்றனவா என்று கவனித்தல். அவ்வாறு வந்தால், அதற்கு முன்னாலும், அது போய்க்கொண்டிருந்தால் அதற்குப் பின்னாலும் சாலையைக் கடக்கக் கூடாது. எனவே, இதன் அவசிதைச் செய்து காட்டல். வண்டிகள் எல்லாம் போனதும், வழக்கமுள்ள சாலை விதிகளை அனுசரித்து, விரைவுடன் நேராகச் சாலையைக் கடந்து, நடைபாதையின்மேல் ஏறிச் செல்லுதல்.

4. சாலையைக் கடந்து செல்லும் பஸ் முதலிய பெரிய வண்டிகளுக்கு முன்னால் நடந்து செல்பவர் சாலையை அவசரமாகக் கடந்து செல்லக்கூடாததன் அவசியத்தையும் காட்ட வேண்டும்.

போக்குவரதது விளையாட்டு : எல்லாவிதமான வண்டிகளும் தங்கு தடங்கல் இல்லாமல் செல்லும் படியான நீண்ட சாலையைப் பள்ளிக்கூட நிலத்தில் குறிக்க வேண்டும். பின்பு விளையாட்டுக்களில் சேர்ந்திருப்பவர்கள் அனைவரும் அவரவர்களுடைய பகுதிகளை நடித்துக் காட்ட வேண்டும். பள்ளிக்கூடப் பாதுகாப்புக்குரிய காவலர், தீயணைக்கும் எஞ்சின், ஆம்புலன்ஸ் ஆகியவைகளும் இப்பகுதிகளில் சேர்ந்திருக்க வேண்டும்.

தீயணைக்கும் எஞ்சின் மணியைக் 'கணகண' என்று அடித்துக்கொண்டு சாலையில் வந்தவுடன், அது எவ்விதத் தடங்கலுமில்லாமல் விரைவாக மேலே செல்லுமாறு, அதற்கு இடம் கொடுக்க வேண்டி எல்லாப் போக்குவரத்தும் உடனே சாலையின் ஓரத்தில் சென்று நின்றுவிட வேண்டும்.

சாலை விதிகளை முழுதும் ஸ்தாபித்தப் பிறகு பள்ளிக்கூடங்களுக்கிடையில் போட்டிகளை ஏற்படுத்தலாம்.

ஒவ்வொரு கட்சியும் குறிப்பிட்ட இடத்திலிருந்து விளையாட்டை ஆரம்பிக்க வேண்டும். முன்னமேயே தீர்மானிக்கப்பட்ட பாதைகளையே உபயோகித்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு செய்வதனால் பலவித வண்டிகள் ஓடிக்கொண்டிருக்கும் நிலைமை ஏற்படும் பின்பு முடிவாக நிச்சயிக்கப்பட்ட ஓர் இடத்திற்கு நடந்து சென்று எல்லோருடனும் கலந்துகொள்ள வேண்டும்.

சாலைகளைக் கடக்கும் சந்திப்புக்களிலும், மற்ற வசதியான இடங்களிலும் போக்குவரத்துப் போலீஸ்காரர்களை நிற்க வைத்தல் ஒவ்வொரு கட்சியும் சாலையில் அனுசரிக்க வேண்டிய பழக்கங்களைக் கவனிப்பதற்குத் தவறினால், அதனால் நேரும் இடையூறுகளைக் குறித்துக்கொள்ள வேண்டும். எந்தக் கட்சி மிகவும் குறைவான இடையூறுகளைக் குறித்திருக்கின்றனவோ, அக்கட்சி வெற்றி பெறும்.

குறிப்பு :

இந்த விளையாட்டுகளில் எல்லாம் விபத்துகளுக்கு உள்ளாகாமல் எச்சரிக்கை செய்யும்பொருட்டு, அங்கங்கே கம்பங்களை நிறுத்தி, அவைகளில் சாலைகளுக்குரிய அடையாளங்கள் உள்ள பலகைகளைப் பொருத்தவேண்டும். இவ்வடையாளங்களை வரைந்து, அவைகளைக் கனமுள்ள அட்டைகளில் பதிய வைப்பது மாணக்கர்களுக்கு மற்றொரு விளையாட்டுப் பொழுது போக்காகும்

(பம்பாயிலுள்ள பாதுகாப்புச் சங்கம் வெளியிட்டுள்ள கட்டுரையைத் தழுவி எழுதப்பட்டது.)

---

## செய்தி அறிவிப்பு (Announcement)

1955-ஆம் வருஷம் மே மாதம் 8-ஆந்தேதியன்று சங்க ஸ்தாபகர் ஹென்றி டியூனண்டு (Henri Dunant) அவர்களின் பிறந்த நாள் ஆண்டு விழாவை மேன்மைப்படுத்த சர்வ தேச ரெட்கிராஸ் நாள் கொண்டாட்ட விழா சம்பந்தமாக புது டெல்லியிலுள்ள நமது தலைமைக்காரியாலயத்தின் மாபெருந் தலைவர் ராஜ்குமாரி அமிர்த கௌரி அம்மையார் அவர்கள் அகில இந்திய ரேடியோவில் பேசினார்கள். அவருடைய பேச்சு மிக்க ஆணித்தரமாகவும், பொது மக்களின் கவனத்தைக் கவரக்கூடியதாகவும் இருந்தது. ஆகையினால் அன்னார் நிகழ்த்திய முழு பிரசங்கத்தின் விவரத்தை நமது வாசகர்கள் அறிந்து கொள்ளும்பொருட்டு, நமது அடுத்த சஞ்சிகையாகிய 'மதராஸ் ஜூனியரில்' (அதாவது 1956-ஆம் வருஷம் ஜனவரி மாதம்) பிரசுரிக்க நினைக்கிறோம்.

## உனக்குத் தெரியுமா ?

உலகம் சுற்றிலும் நாள்தோறும் பொறுப்பேற்று நடத்தும் ஆயிரத்தொரு சேவைகளில் மற்றவர்க்குச் சேவை செய்வதே ஜூனியர் ரெட்கிராஸ் அங்கத்தினர்களுடைய மூலாதார வேலையாகும்.

நோயாளிகளுக்குப் பழம், பூ ஆகியவற்றை எடுத்துச் செல்ல மருத்துவசாலைகளுக்கும், சானடோரியங்களுக்கும் (Sanatoriums) விஜயஞ் செய்வதை ஜூனியர் ரெட்கிராஸ் அங்கத்தினர்கள் சமூகச் சேவையாக ஏற்று நடத்துகின்றார்கள்.

அக்டோபர் மாதத்திலிருந்து லீகின் வேண்டுகோளைத் தழுவி 23 தேசீயச் சங்கங்களால் (National Societies) அனுப்பப்பட்ட பரிசுகளிலிருந்து 2,15,000க்கு மேற்பட்ட வியட்நாம் அகதிகள் (Viet Nam Refugees) ரெட்கிராஸ் உதவி பெற்றார்கள்.

முக்கியமாகச் செகண்டரிப் பள்ளிக்கூடங்களில் பரந்த அளவில் அங்கத்தினர்களைச் சேர்க்க தேசிய ஜூனியர் ரெட்கிராஸ் பிரிவின் விசேஷமான வளர்ச்சியை லீக் காரியதரிசி ஜெனரல் (League Secretary General) கண்டார்; மேலும், தேசிய ஜூனியர் ரெட்கிராஸ் பிரிவு 1954-ஆம் வருஷம் பெர்ட்ரான்ஜில் (Bertrange) அகில தேசீயக் கல்வி நிலையம் நடத்தினபோது, ஆறு தேசத்து ஜூனியர்கள் அதில் கலந்துகொண்டார்கள் என்பதையும் கண்டு கொண்டார்.

---

## குழந்தைகளின் அபாய வாழ்வு

அபாயமுள்ளது, அபாயமற்றது என்பதை வேறு படுத்தி அறிய முடியாத இளம் குழந்தைகள் தினசரி ஆபத்துக்களுக்கு உட்படுகின்றார்கள். சுவீடிஷ் கணக்கின் பிரகாரம் ஒரு வயது வரையுள்ள குழந்தைகள் ஆஸ்பரின் மாத்திரைகள் (aspirin tablets) முதல் பொத்தான்கள் வரையிலுள்ள பொருள்களை விழுங்கி விடுவதானது அடிக்கடி நடக்கும் ஆபத்துச் செயலாகும்

தீக்காயங்களுக்கும், தண்ணீரில் மூழ்குதலுக்கும் அபாய காலம் ஒன்று உண்டு. சுவீடனில் விபத்துக்களில் இறந்த குழந்தைகளின் எண்ணிக்கையில் ⅓ பாகம் தண்ணீரால் ஏற்பட்டவை. கண்காட்சியை ஏற்படுத்தி அதன் மூலமாகக் குளிக்கும் விருப்பத்தையும், அதன் அவசியத்தையும் குழந்தைகளுக்கு உண்டாக்கி, சுலபமாக நீந்தக் கற்பிக்கும் முறைகளை வயது நிரம்பிய குழந்தைகளுக்கு எடுத்துக் காட்ட வேண்டும்.

போலீஸ் ஒத்துழைப்பால் ஆதரிக்கப்பட்ட கிண்டர் கார்டன் போக்குவரத்துக் கல்வியானது மூன்றிலிருந்து நான்கு வயது வரையுள்ள குழந்தைகளுக்கு ஏற்படும் சாலை விபத்துக்களைக் குறைக்க உதவுகின்றது.

ஜன்னலில் பொருத்தப்பட்ட குழந்தை படத்தின் மூலமாக நர்சரி (Nursery)யில் குழந்தைகள் ஜன்னல்களைத் திறந்து வெளியே விழுந்து விடாமலிருக்க, ஜன்னல் மூடிகளைப்பற்றிய தனி அக்கறை எடுத்துக்கொள்ளுமாறு பெற்றோர்களுக்குக் கண்காட்சி அறிவிக்கிறது. இத்தகைய விபத்து அனேகமாக ஐந்து வயது வரையிலுள்ள குழந்தைகளுக்கு நேருகிறது.

எறிபடை (Darts), அம்பு, வில், கவண் கற்கள் (slings) ஆகியவைகள் ஏழாம் வயதில் உடயோகிப்பவர், எதிரி நண்பர்கள் ஆகிய இரு சாராரையும் பயமுறுத்தும் அபாயமான விளையாட்டுப் பொருள்களாகும். சைக்கில் விபத்தும் அடிக்கடி ஏற்படுகின்றது.

குழந்தைகளுக்கு நேரும் அபாயங்களைச் சித்திரங்கள், போட்டோப் படங்கள், வர்ணப் படங்கள் கொண்ட உலக விவகாரக் கதைகள் முதலியவைகளினால் பிரத்தியட்சமாகச் சித்தரித்துக் காட்ட வேண்டும் மேலும், அவை முன்னெச்சரிக்கை தரும் பாடமாகவும் இருக்க வேண்டும். சிறுவர்களுடைய சந்தோஷத்தையும் ஆரோக்கியத்தையும் வளர்ச்சியுறச் செய்வதுபற்றிய ரெட்கிராஸ் சங்கத்தின் பிரயாசை வெளியில் பிரத்தியட்சமாக இல்லை.

—From The Red Cross World.

---

## ஜப்பானில் குழந்தைகளின் விளையாட்டுகள்

ஒரு நாள் நான் டோகியோ நகரில் ஜப்பானிய ரெட்கிராஸ் கட்டடத்தின்* கதவருகில் நின்றுகொண்டிருந்த பொழுது, குழந்தைகள் வீறிட்டு அழும் சப்தம் போன்ற பின் வரும் சப்தத்தைக் கேட்டேன்:—

'' 'சோகி (Choki)!'...... ..'பா(Pa)!' ........
'குரிகோ (Guriko)!'.. குரிகோ (Guriko)!' ''.

உடனே நான் வாசற்படிக் கதவிற்கு ஓடிப்போய்ப் பார்க்க, நான்கு ஜப்பானியச் சிறுமிகள் தலைமயிர் முதுகில் தொங்கியவாறு அடித்துக்கொண்டு, ஒன்று சேர்ந்து விளையாடும் நேரத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தார்கள். அவ்விளையாட்டின் பெயர் '' ஜான் கென் பான்'' (Jan Ken Pon) என்று பின்னர் அறிந்துகொண்டேன்.

**ஜான் கென் பான்** (Jan Ken Pon) : இது ஜப்பானியச் சிறுவர் சிறுமிகளின் பிரசித்தமான விளையாட்டுகளில் ஒன்று. இவ்விளையாட்டு விளையாடுவதற்குரிய மூலகாரணப் பாட்டு பின் வருமாறு :

Stone breaks scissors,
Scissors cut paper,
Paper wraps stone,

ஒரு பெண் மற்றவர்களின் முகம் நோக்கித் தன் கையை நீட்டுகிறாள் அப்பொழுது கத்திரிக்கோலை விளக்க அவள் இரு விரல்களைக் காட்டியிருக்கலாம்; கல்லை விளக்கக் கையைப் பொத்திக்கொண்டிருக்கலாம்; காகித அடையாளத்திற்காக உள்ளங்கையைத் திறந்திருக்கலாம். மற்றவர்கள் அப்பெண் காட்டும் அடையாளங்களின் அர்த்தங்களைப் புரிந்துகொண்டு, அவளுடன் போட்டியிட முயற்சிக்கிறார்கள்.

**ஓர் உதாரணம்** : போட்டியிடுபவள் கல்லைக் குறிக்கும் அடையாளத்தைக் காண்பிக்கிறாள். இந்தத் தொகுதியிலிருக்கும் ஒரு பெண் கல்லைக் காட்டுகிறாள். அப்பொழுது அது ஒரு பந்தயமாகும். மற்றொரு பெண் கத்திரிக்கோலை விளக்கும் அடையாளத்தைக் காட்டி, 'கல் கத்திரிக்கோலை உடைக்கும்'' என்பதற்காகத் தோற்பாள். மூன்றாவது பெண் காகித அடையாளத்தைக் காட்டி, ' காகிதம் கல் மடிக்க உதவும் ' என்பதற்காக வெற்றியடைவாள்.

ஜான் கென் பான் (Jan Ken Pon) விளையாட்டு, முக்கியமாகப் பலவித விளையாட்டுகளிலும் இடம் பெறும். இவ்விளையாட்டு சண்டையை நீக்கவும், தனிப்பட்டவரை விளையாட்டினின்று நீக்கவும், விளையாடுபவரை ஊக்கப்படுத்தி மேன்மேலும் விளையாடும்படிச் செய்யவும் கூடும்.

ஜான் கென் பான் (Jan Ken Pon) விளையாட்டில் கல்லின் மூலமாய் ஒரு பெண் வெற்றி அடைந்தவுடன், ஜப்பானியர் கல்லை ''குரிகோ'' (Guriko) என்று மூன்று உச்சரிப்பெழுத்துக்களால் உச்சரிப்பதால் அவள் மூன்று அடி முன்னால் செல்கிறாள்.

ஒரு பெண் '' காகிதம் '' அல்லது ''பா'' (Pa) மூலம் ஜெயித்தால், அவள் ஐந்தடி முன்னால் செல்லுகிறாள். ''பா'' என்பது 'பை-ய்-ன-ஆப்பிள்' (pa-i-na-apple)-பைன் ஆப்பிள்- என்பதற்காகச் சுருக்கமாய்ச் சொல்லப்படுகிறது.

**ஓட்டிடாமா**(Otedama) : ஓட்டிடாமா என்பது மற்றொரு விருப்பமான விளையாட்டாகும். இது பலவகைச் சித்திரங்களையும், உற்சாகம் ஊட்டக்கூடிய வர்ணங்களையும் கொண்ட காசுகளால் (Coins) நிரம்பிய இரண்டு பைகளை வைத்துக்கொண்டு விளையாடுவது. விளையாடும் குழந்தை இரண்டு கைகளையும் தயாராக வைத்துக்கொண்டு, இரண்டு பைகளில் ஒரு பையைத் தலைக்கு மேலே எறிந்ததும், மற்றொரு பையையும் மேலே எறிந்து, முதலில் எறிந்த பையைப் பிடித்துக்கொள்ளும். மற்றக் குழந்தைகள் விளையாடும் குழந்தையைச் சுற்றி நின்றுகொண்டு, பாட்டிற்கு ஏற்பப் பைகளை எறியப் பாடுவார்கள். சில சமயங்களில் பாட்டோசை அதிகமாவதாலும், குறைவதாலும் பையை வீசி எறியும் குழந்தை குழப்பம் அடைந்துவிடும். நன்றாக விளையாடுபவர் ஒரே சமயத்தில் ஐந்து பைகளைக் கையாளலாம்.

**முதலெழுத்து விளையாட்டு** (Alphabet Game) : ஜப்பானிய நாட்டின் பழக்க வழக்கங்களை எடுத்துக் காட்டும் வர்ணங்களும், படங்களும் குழந்தைகளின் விளையாட்டுகளில் முக்கியத்துவம் பெற்றுள்ளன. இவ்விளையாட்டின் மூலம் குழந்தைகள் தங்கள் நாட்டின் பழக்க வழக்கங்களைத் தெளிவாக அறிந்துகொள்கிறார்கள்.

இந்த விளையாட்டில் ஏழு பேர்கள் கூடி விளையாடுவார்கள். இவர்களுக்குத் தெரிந்த கதைகளும், பரம்பரை கூறும் சில பாடல்களும் 48 கார்டுகளில் அச்சடித்திருக்கும். ஒவ்வொரு பாட்டின் தலைப்பும் ஜப்பானிய எழுத்துக்கள் 48ல் ஒவ்வோர் எழுத்தால் ஆனது. பலவித வர்ணங்களால் வேடிக்கைப் படங்கள்-வரையப்பட்டுள்ள கார்டுகள் பாயின் (tatami) மேல் சிதறி இருக்கும். ஒரு பெண்ணோ அல்லது பையனோ பாட்டுக் கார்டுகளைப் படிக்கும் பொழுது மற்றவர்கள் பாயின்மேல் சிதறியிருக்கும் படக்கார்டுகளில் அப்பாட்டிற்கொத்த படக் கார்டை கவனிப்

பார்கள். எவர் தம் சகாக்களைவிடப் படக் கார்டு களை அதிகமாகச் சேகரிக்கிறாரோ, அவர் தலைவராக யிருந்து, பாட்டுக் கார்டுகளைப் படிப்பார். இது மாதிரியே விளையாட்டும் தொடர்ந்து விளையாடப் படும்.

Hanetsuki: புது வருஷக் கொண்டாட்ட நாளில் எங்குப் பார்த்தாலும் பல நிறமுள்ள வர்ணங்கள் மயமாகவே இருக்கும். பயங்கர சர்ப்பங்களையும் ஜப்பானின் கதை விளக்கங்களையும் பல நிறமுள்ள வர்ணங்களைக்கொண்டு ஜப்பானியச் சிறுவர்களால் தீட்டப்பெற்ற காற்றாடிகள் ஆகாயத்தில் பறக்கும். (கிமோனோஸ்)என்னும் நகரத்தில் எங்குப் பார்த்தாலும் சிகப்பு, மஞ்சள், பச்சை, நீலம் ஆகிய பல நிறங்களில் கண்ணைப் பறிக்குமாறு ஒளி வீசிக்கொண்டிருக்கும். பெண்கள் பெரிய பூப் பந்துகளை எறிந்து கொண்டு குதித்து விளையாடுவார்கள். மற்றவர்கள் Hanetsuki விளையாட்டை விளையாடுவார்கள். இந்த விளையாட்டில் இரண்டு பேர்கள் கலந்து கொள்வார்கள். இவ்விருவரில் ஒவ்வொருவரும் தட்டையான மேற்புறமும், கைப் பிடியும் உடைய வர்ணம் தீட்டப்பெற்ற போர்டுகளைப் பிடித்துக் கொண்டிருப்பார்கள். அவர்கள் ஒருவரையொருவர் எதிர்த்து விளையாடுவார்கள்.

**ஒரு மீட்டர்—இரண்டு மீட்டர்கள்:** நான்கு புஷ்டியான பெண்கள் விளையாடிக்கொண்டிருந்ததை நான் மற்றொரு நாள் பார்க்கும்பொழுது அவர்கள் "Ikken Niken" பாடினார்கள். "ஒரு மீட்டர்-இரண்டு மீட்டர்கள்" என்பது இதன் ஆங்கில மொழிப்பெயர்ப்பாகும் பெண்கள் விளையாட்டை நடத்துவதற்குமுன் இதன் பொருள் விளங்கவில்லை.

ஜான் கென் பான் (Jan Ken Pon) விளையாடும் கூட்டத்தை இரண்டு பகுதிகளாகப் பிரித்து, பகுதிக்கு இடையில் ஐந்து அடி இடம் விட்டு இருப்பார்கள். முதல் வரிசையைச் சேர்ந்த பெண் நடுவில் கல்லை வீசி எறிவாள்; கல்லருகே ஓர் அடி குதித்து, அதை எடுத்து, எதிரிகளின் வரிசைக்கு முன்னால் நான்கு அடிகள் செல்வாள், பின்பு கல்லைக் கோட்டின்மேல் வீசித் தன் சகாவுடன் ஐந்து அடி பின்னால் தத்திக்கொண்டே தன் இருப்பிடத்தை அடைவாள். இம்மாதிரி அடிக்கடித் தொடர்ந்து நடத்தப்படும். ஒவ்வொரு முறையும் முன்னதைவிட ஓர் அடி தூரமாகவே கல் எறியப்பட்டு ஐந்து அடி முடியும்வரையிலும் இவ்விளையாட்டு விளையாடப்படும்.

முதல் வரிசையிலுள்ள இரு பெண்களும் வெற்றியடைவதற்கு முன் ஏதேனும் பிழை செய்துவிட்டால், இரண்டாவது வரிசையினர் உடனே முன் வருவர்.

மற்ற விளையாட்டுகள்: மறைதலும்-பார்த்தலும், ஓடித் தொடுதலும், கயிற்றைத் தாண்டிக் குதித்தலும் உலகம் அறிந்த விளையாட்டுகளாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ள குழந்தைகளைப் போலவே ஜப்பானியக் குழந்தைகளும் இவ்விளையாட்டுகளில் பழக்கமுள்ளவர்களாய்ச் சிறந்து விளங்குகிறார்கள். "வீடுகட்டி விளையாடும் விளையாட்டையும் (Play house) அவர்கள் அதே முறையில் விளையாடுவார்கள். அவர்களில் பெரியவர்களான பையன்களும் பெண்களும் பெற்றோர் போல நடித்து, சிறுவர் சமைக்கவும், சுத்தமாயிருக்கவும், தங்கள் பொம்மைக் குழந்தைகளைப் பத்திரமாக வைத்துக்கொள்ளவும் பார்த்துக் சொல்லுவார்கள்

இந்த ஜப்பானியப் பெண்கள் விளையாடும் நேரத்தில் பார்க்கும்பொழுது பிற நாட்டு நாகரிகத்தால் மறைந்தும் மாற்றப்பட்டும் விளங்கும் பழக்க வழக்கங்கள் அயலார்க்குக் காணப்படும்.

—அமெரிக்கன் ஜூனியர் ரெட்கிராஸ் ந்யூஸ்

---

## ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதிகளிடமிருந்து கிடைத்த செய்திகள்

குறிப்பு:—முன்னால் வெளியிடப்பட்டுள்ள எமது சஞ்சிகையில் ரெஜிஸ்திரேஷன் எண்களைப் பற்றிக் குறிப்பாக வெளியிட்டிருந்த போதிலும், இன்னும் சில சங்கத் தொகுதிகள் சஞ்சிகைகளில் பிரசுரம் செய்வதற்காகத் தங்கள் சேவைகளின் அறிக்கைகளைத் தங்கள் ரெஜிஸ்திரேஷன் எண்ணைக் குறிப்பிடாமலே எங்களுக்கு அனுப்பிக்கொண்டிருக்கின்றன. நாங்கள் இனிமேல் இது சம்பந்தமாய் வெகு கண்டிப்பாக இருக்கப் போகிறதினால், ரெஜிஸ்திரேஷன் எண்களைக் குறிக்காமல் அனுப்பப்படும் அறிக்கைகள் நிச்சயமாக நமது சஞ்சிகையில் பிரசுரம் செய்யப் போவதில்லை என்று சங்கத் தொகுதிகளுக்கு முடிவாக அறிவிக்கப்படுகிறது.—பத்திராதிபர், "மதராஸ் ஜூனியர்."

### கோயமுத்தூர்

#### போர்டு ஆரம்பப் பாடசாலை, கன்னிவாடி

1955-ஆம் வருஷம் ஜூன் மாதம் 29-ஆந்தேதியன்று திரு. ஷண்முகம் அவர்களின் தலைமையில்

சங்கத் தொகுதி மாதாந்திரக் கூட்டம் நடத்திற்று. சென்ற கூட்டத்தின் நிகழ்ச்சிகளை வாசித்து உறுதி செய்யப்பட்டவுடன், 1955-56-ஆம் வருஷங்களுக்காகக் காரியாலயப் புதிய நிர்வாகஸ்தர்களைத் (Office-Bearers)தேர்ந்தெடுத்தார்கள். வரப்போகும் வருஷத்தில் செய்ய வேண்டிய செயல்களைச் சங்கத் தொகுதி அங்கீகாரம் செய்தது.

### போர்டு உயர்தரப் பாடசாலை, கின்னத்துக்கடவு

1955-ஆம் வருஷம் ஜூலை மாதம் 19 ஆந்தேதி பாடசாலை மாணவர்களாலும், அங்கத்தினர்களாலும் ஜில்லாக் கலெக்டரின் மனைவியாரான திருமதி கௌரி நம்பியார் அவர்களின் தலைமையில் பாடசாலை ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதி துவக்க விழா கொண்டாடப்பட்டது. கோயமுத்தூர் ஜில்லா ரெட்கிராஸ் பிராஞ்சுக் கௌரவக் காரியதரிசி திருமதி சாவித்திரி ஷண்முகம், ஜில்லா ஜூனியர் ரெட்கிராஸ் சப்-கமிட்டிக் கன்வீனர் திரு. S R. சந்திரன், இன்னும் பலர் ஜூனியர் ரெட்கிராஸ் விஷயங்களையும், மற்ற விஷயங்களையும் பற்றி மிகவும் ஊக்கமாகச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். சென்னைப் பிராஞ்சு ஜூனியர் ரெட்கிராஸின் கௌரவ டயரெக்டரால் கொண்டுவரப்பட்ட 'இளமைப் பருவத்தில புகைப் பிடித்தலைத தடுகதும இயக்கந்'தை அங்கத்தினர்கள் மிகவும் அக்கரையோடு நடத்தி, சங்கத் தொகுதி செய்ய வேண்டிய சேவைகளில் இதையும் ஒரு பகுதியாக எடுத்துக்கொள்ள வேண்டும் என்று திரு. S. R. சந்திரன் அவர்கள் தம் பேருரையில் கூறினார்கள். அவ்விழாவில் தலைவரால் சில மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன ; அங்கத்தினர்கள் அச்சமயத்தில் நானாவித வேடிக்கைக் காட்சிகளைக் காட்டினார்கள்.

## சென்னை

### கார்ப்பரேஷன் ஆண்கள் பாடசாலை, மேற்கு மாம்பலம்

1955-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 3-ஆம் தேதி சென்னை ராஜ்ய ரெட்கிராஸ் பிராஞ்சின் கௌரவக் காரியதரிசி திரு. C. அமிர்த கணேசன் அவர்கள் தலைமையில் மேலே குறித்துள்ள பாடசாலையிலேயே பாடசாலையின் மாணவர்கள், நிர்வாகஸ்தர்கள் ஆகியவர்கள் முன்னிலையில் ஜூனியர் ரெட்கிராஸ் சங்கத் தொகுதி துவக்கப்பட்டது. அக்கூட்டத்தில் சங்கத் தொகுதியின் செயல்களைப்பற்றிய அறிக்கை வாசிக்கப்பட்டது. சங்கத் தொகுதியில் 225 அங்கத்தினர்கள் இருக்கின்றார்கள் என்றும், அதை நிர்வகிக்கப் பயிற்சி பெற்ற மூன்று கவுன்சிலர்கள் இருக்கின்றார்கள் என்றும், ஜூனியர் ரெட்கிராஸின் பல்வேறு செயல்களைக் கவனித்துக்கொள்ளச் சங்கத் தொகுதி மூன்று உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது என்றும் அறிக்கையில் கூறப்பட்டிருக்கின்றன

## நீலகிரி-கூனூர்

### செயின்டு மேரி உயர்தர ஆரம்பப் பாடசாலை

ஜில்லாவில் உள்ள ஊக்கத்துடன் சேவை செய்யும் சங்கத் தொகுதிகளுள் மேற்படி பாடசாலையின் சங்கத் தொகுதியும் ஒன்றாகும். பாடசாலையின் ஜூனியர்கள் வழக்கமாக உள்ள ஜூனியர் ரெட்கிராஸ் செய்கைகளுடன், தங்கள் பாடசாலைத் தோட்டத்தைப் பாதுகாக்க மிகவும் சிரத்தையும் எடுத்துக்கொள்ளுகின்றார்கள். ஜூன் மாதத்தில் நமது கௌரவ டயரெக்டர் பாடசாலைக்கு விஜயஞ்செய்து சங்கத் தொகுதியைப் பார்வையிட்டார். சங்கத் தொகுதி மாணவர்கள் பாடசாலைத் தோட்டத்தில் வேலை செய்துகொண்டிருக்கும்பொழுது எடுத்த புகைப் படங்களை இந்த சஞ்சிகையில் வெளியிடப்பட்டிருக்கின்றது அயல் நாட்டுச் சங்கத் தொகுதிகளிடமிருந்து மாற்றிக்கொள்வதற்கு ஆல்பம் ஒன்று தயாரிப்பதாகவும் சங்கத் தொகுதி வாக்குத்தத்தம் செய்திருக்கிறது

## சேலம்

### போர்டு ஆரம்பப் பாடசாலை, தக்கல்நாயக்கன்பட்டி

1955-ஆம் வருஷம் ஜூன் மாதம் 5-ஆந்தேதி சங்கத் தொகுதி வருடாந்திரக் கூட்டத்தை நடத்திற்று. பாடசாலையின் தலைமையாசிரியர் அவ்வருடாந்திரக் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். சென்ற வருஷத்தில் சங்கத் தொகுதிக்காக நற்சேவைகள் செய்ததற்கு அடையாளமாகச் சில அங்கத்தினர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. அத்தகைய அங்கத்தினர்களுக்கு நன்றி கூறும் சில தீர்மானங்களும் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டன

## தஞ்சாவூர் (கிழக்கு)

### ஸ்ரீ கிருஷ்ணு ஆரம்பப் பாடசாலை, தப்பலம்புலியூர்

சங்கத் தொகுதியின் அங்கத்தினர்கள் 1955-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 15-ஆந்தேதியன்று திரு. T. N. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் தலைமையில் "சுதந்தர நாளை" வெற்றிகரமாகக் கொண்டாடினார்கள். அந்நாளில் பலவித வேடிக்கைக் காட்சிகள் காட்டப்பட்டு, பாடசாலைக் குழந்தைகளுக்கு மிட்டாய் தினுசுகள் வழங்கப்பட்டன. இந்தப் பாடசாலை உயர்தர ஆரம்பப் பாடசாலையாகக் கூடிய சீக்கிரத்தில்

மாற்றப்படும் என்று பாடசாலைத் தலைமையாசிரியர் கூட்டத்தில் அறிவித்தார்.

### தஞ்சாவூர் (மேற்கு)

#### உதவி ஆரம்பப் பாடசாலை, நடராஜபுரம்

ஜூனியர்கள் 1955-ஆம் வருஷம் மே மாதம் 8-ஆந் தேதி பாடசாலையின் தலைமையாசிரியர் திரு. சீனிவாச செட்டியார் தலைமையில் ஹென்றி டியூனன்டின் (Henri Dunant) பிறந்த நாளைக் கொண்டாடினார்கள். அச்சமயத்தில் சங்கத் தொகுதியின் அங்கத்தினர்கள் போட்டோ எடுத்துக்கொண்டார்கள்.

### திருச்சிராப்பள்ளி

#### தெலுங்கு உதவி ஆரம்பப் பாடசாலை, பஜார் தெரு

சங்கத் தொகுதியில் எழுபத்து நான்கு அங்கத்தினர்கள் இருக்கின்றார்கள். அச்சங்கத் தொகுதி இரண்டு கவுன்சிலர்களின் நிர்வாகத்தில் இருக்கின்றது. 1954-ஆம் வருஷத்தில் செய்த நற்செயல்களைக் குறித்து ஓர் அறிக்கையைச் சங்கத் தொகுதி சமர்ப்பித்தது. 1954-ஆம் வருஷத்தில் சங்கத் தொகுதி ஒன்பது கூட்டங்களை நடத்திற்று என்றும், சங்கத் தொகுதியின் பல்வேறு விஷயங்களைக் கவனித்துக்கொள்ள அங்கத்தினர்கள் ஐந்து உட்பிரிவினர்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றார்கள் என்றும் அவ்வறிக்கை தெரிவிக்கிறது. சங்கத் தொகுதி நிதியிலிருந்து (Group Fund) புஸ்தகங்கள், பலகைகள் முதலியவைகளை வாங்கி, ஏழை மாணவர்களுக்கு இலவசமாகக் கொடுக்கப்பட்டன.

### திருநெல்வேலி

#### A. S. P உயர்தர ஆரம்பப் பாடசாலை, கருவேலம்பாடு

மேற்படி பாடசாலையின் சங்கத் தொகுதியில் 130 அங்கத்தினர்கள் இருக்கின்றார்கள். அது கூட்டங்களை மிகவும் ஒழுங்காக நடத்துகின்றது. அங்கத்தினர்கள் சுற்றுப்புறக் கிராமங்களுக்குச் சென்று அங்கங்குள்ள மக்களினிடையே 'சுத்தம்' என்பதைப்பற்றிப் பிரசாரம் செய்து வருகின்றார்கள். சங்கத் தொகுதி முதலுதவிக்கான பொருள்களை வைத்துக்கொண்டு, காயமுற்றவர்களுக்கு முதலுதவி செய்கிறது.

#### இந்து கிறிஸ்தவ உயர்தர ஆரம்பப் பாடசாலை, முக்குபேரி

சங்கத் தொகுதிக் கூட்டம் 1955-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 17-ஆந்தேதி திருமதி செல்லக்கனி ஹரிராம் அவர்களின் தலைமையில் நடந்தது. சங்கத் தொகுதிக் கவுன்சிலர், சொற்பொழிவு நிகழ்த்தினார். வெள்ளத்தினால் பாதிக்கப்பட்ட ஜனங்களின் நிவாரணத்தின் பொருட்டு ரூ. 2 நன்கொடையாகச் சங்கத் தொகுதி கொடுத்தது.

#### இந்து உயர்தர ஆரம்பப் பாடசாலை, சுந்தரபாண்டியபுரம்

சங்கத் தொகுதி 1955-ஆம் வருஷம் ஜூலை மாதம் 29-ஆம் தேதி கவுன்சிலர் தலைமையில் கூட்டம் நடத்திற்று. அக்கூட்டத்தில் அங்கத்தினர்களில் சிலர் ரெட்கிராஸ் சேவைகள், சர்வதேசச் சகோதரப்பற்று (International Friendliness) முதலிய விஷயங்களைப்பற்றிப் பேசினார்கள். 1955-ஆம் வருஷம் ஜூலை மாதம் 30-ஆம் தேதியன்று ஜூனியர்கள் சர்வதேச சுகாதார நாளைக் (International Health Day) கொண்டாடினார்கள். அந்நாளில் அவர்கள் சுகாதாரப் போஸ்டர்கள் முதலியவைகளை எடுத்துக்கொண்டு ஊர்வலம் வந்தார்கள். சங்கத் தொகுதியின் ஆதரவில் பாடசாலை மானேஜர் திரு. G. ராம ஐயர் அவர்களின் தலைமையில் அன்று மாலை ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. மேற்படி பாடசாலையின் சங்கத் தொகுதியில் 95 அங்கத்தினர்கள் இருக்கின்றார்கள்.

---

# INDIAN RED CROSS
# FUND RAISING CAMPAIGN 1955

REMEMBER
NOVEMBER IS RED CROSS MONTH

The Red Cross is the nation's premier social service organisation. It relies on you for support to carry on its mission of mercy.

**CONTRIBUTE LIBERALLY**
**VOLUNTEER FOR SERVICE**
**ENROL AS A MEMBER**

*Your nearest Red Branch will tell you how else you can help.*

*List of Junior Red Cross Trained Counsellors—continued from JULY, 1955 Issue.*

ANANTAPUR—

2887 G. Hussain Khan, Municipal Muslim Central School, Tadpatri.

2888 P. Narayana Raju, Teacher, Municipal Boys' School, Tadpatri.

2889 P. Narayanaswami, Teacher, Municipal Boys' School, Tadpatri.

2890 S. Pakkeerappa, Board Ele. School, Chikkalur, Tadpatri Taluk.

2891 P. Venkataswami, Board School, Kottalapalli.

2892 P. Thimmappa, Board School, Kalyandrug.

2893 S. Subba Rao, Board I Ward School, Pamidi.

2894 Y. Karibasanna, Board High School, Kotlapalli.

2895 J. Sundara Raju, Board High School, Kondapuram.

2896 P. Hussain Sahib, Board H. Boys School, Kondapuram.

2897 N C. Venkataramiah, Board V Ward School, Pamidi.

2898 S. Govinda Rao, Board Hr. Ele. School, Pamidi.

2899 D. Appa Rao, Board Higher Ele. School, Yadiki.

2900 N Narappa, Board Central School, Uravakonda.

2901 P Rameswaran, B C. School, Yellanur.

2902 M. Veeramma, Board Main Bazaar School, Uravakonda.

2903 M. Narasamma, Board Hindu Girls School, Uravakonda.

2904 D. Hussain Peera, Bd. Ele. School, Peddavadagur.

2905 K. Nageswara Rao, Santhebidunur, Hindupur Taluk.

2906 A. Karibasappa, Board Ely. School, Bukkarayasamudram.

2907 B. Savitramma, Board School, Lepakshi.

2908 S. Honnur Sahib, Board School, Enumulapalli.

2909 K. Chennamma, Board School, Kundurpi.

2910 M. Saranaiah, Board School, Vidapanakal.

2911 M Subbanna, Board School, Bukkacharla.

2912 D. Narappa, Board School, Bukkarayasamudram.
2913 P. Seenappa, Board School, Chalivindala.
2914 B. Balappa, Board High School, Atmakur.
2915 R. Varadarajulu, Board School, Buchaiahgaripalli.
2916 Rajasiromani, Board School, Palasamudram.
2917 U. Ramachandra Raju, Board Ele. School, Venkaragunta, Reddipalli Post.
2918 B. Lakshmirangaiah, Board School, Lalikivandalpalli, Kadiri Taluk.
2919 B. Narasappah, Board School, Nallacheruvu.
2920 B. Ujjanna, Board School, Raptadu.
2921 B. Subbanna, Board School, Raptadu.
2922 Mohideen, Board School, Chiyyedu.
2923 M. Lingappa, Board School, Kandukur.
2924 P. Srinivasalu, Board Ele. School, Chabala.
2925 C. S. Krishnamurthi, Board Ele. School, Katipi.
2926 Y. Honnurappa, Board Hr. Ele. School, Thuttrallapalli.
2927 P. Kondappa, Board Ele. School, Taticherla.
2928 K. Venkataram Rao, Board H. Boys' School, Brahmanayaleru.
2929 K. Lakshminarasaiah, Board Ele. School, Condireddipalli.
2930 K. Madhava Rao, Board Ele. School, Narasanayanikunta.
2931 S. Narasappa, N.E. School, Venkarajukalava.
2932 M. Kambanna, Board Ele. School, Atmakur.
2933 K. Krishnamurthi, Board Ele. School, Atmakur.
2934 B. Ramappa, Board Ele. School, Atmakur.
2935 K. Venkataramiah, Board H. Boys' School, Sanapa.
2936 Syed Mahaboob, Board Ele. School, Gorantla.
2937 C. Obanna, Board H. Boys' School, Chinnapalamada.
2938 S. Gurumurthi, Board H. Boys' School, Fort, Gooty.
2939 D. Sambasastri, B.G.B. School, Cilamathur.
2940 A. Hanumantha Rao, Board I Ward School, Pamidi.
*2941 K. Seetharamappa, Board School, Chilamathur.
2942 A. Kristappa, Board School, Agali.
2943 W. Rajendran, Board School, Nallacheruvu.
2944 B. Sudarsanamurthi, Board School, Talamarla.
2945 C. Narayanaswami, Board School, Talamarla.
2946 A. Rameswaram, Govt. Training School, Srikakulam.
2947 M. Ramalingaiah, Board School, Vidapanakal.
2948 B. Nallamma, Board Higher Ele. School, Singanamala.
2949 B. Narayana Raju, Board School, Kadadarakunta.
2950 A. Pedda Chinnappa, Board School, Kadadarakunta.
2951 C. Lakshmidevamma, Board Girls School, C. Bandaneedapalli.
2952 P. V. Chalam, Board School, Chettipalli.
2953 B. Gangappa, Board School, Chettipalli.
2954 B. Venkataravanappa, Ex-Dist. Board Edl Officer, Anantapur.
2955 Kristappa, Junior Dy. Inspector of Schools, Anantapur.
2956 R. Subbaramaiah, Panchayat Board School, Reddipalli.
2957 M. Lakshmi Narasayya, Board Ele School, Nyammaddalla.
2958 K. Lakshmi Narasappa, Board Ele. School, Nyammaddalla.
2959 P. Rangappa, Board Ele. School, Nyammaddalla.
2960 A. Rameswara Sastri, Board High School, Gorantla, Anantapur.

Printed by K. S. S. RAJAN at the Jupiter Press, Ltd., 109-C, Mount Road, Madras-18.
Published by The Indian Red Cross Society, Egmore, Madras-8.